திருவிழாவிற்கோ



அல்லது தேநீர் விருந்திற்கோ
செல்லும்பொழுது ...



சிறிது

# ஹிமாலயா புக்கே பெர்ப்யூமை

பூசிக்கொண்டால் உங்கள்

கவர்ச்சியை அதிகரிக்கச்செய்யும்.




---

# கல்கி பொருளடக்கம்

மலர் 13 | இதழ் 43 | 1954 மே 23 | ஜய வரு வைகாசி 10

| | | | |
|---|---|---|---|
| ஸ்ரீபிரகாசாவின் சேவை | (தலையங்கம்) | ... | 3 |
| காந்தி மண்டப நிதி | ஸ்ரீபிரகாசா | ... | 5 |
| கமிட்டி கண்ட குறுக்கு வழி ! | ... | ... | 6 |
| அவருடைய கோரிக்கை ! | (கார்ட்டூன்) | ... | 7 |
| களங்கத்தை உண்டாக்கும் காரியம் | ... | ... | 8 |
| ஏழை நோயாளிகளுக்கு இடமில்லை | ... | ... | 9 |
| கையைக் கழுவினார்கள் ! | ... | ... | 10 |
| காந்தி மண்டப நிதிக் கூட்டம் (போட்டோ : கணேஷ்) | ... | ... | 11 |
| பக்திமயமான நாடகம் | பரதன் | ... | 13 |
| அபாய கட்டம் ! | ரகு | ... | 16 |
| சக்கரவர்த்தித் திருமகன் | ராஜாஜி | ... | 18 |
| கோகிலா | ரமண்லால் வஸந்தலால் தேசாய் - ரா. வீ. | ... | 23 |
| கற்பகத் தரு மறைந்தது | ... | ... | 32 |
| அறியாத அன்பு | அநுத்தமா | ... | 35 |
| எரிந்த மரம் (போட்டிக் கதை) | லோபோ பிரபு | ... | 43 |
| அவன் கடமை | வேம்பு கிருஷ்ணமூர்த்தி | ... | 53 |
| யோகாசனச் சிகிச்சை | வ. என. குமாரஸ்வாமி | ... | 58 |
| பொல்லாத பொன்னம்மாள் ! | நா. வி. பரமேசுவரன் | ... | 62 |
| வண்டே கேள் ! | ... | ... | 67 |
| வேணு கானம் (பாப்பா மலர்) | விஜயம் | ... | 71 |

"கல்கி"யில் வெளியாகும் கதைகளில் உள்ள பெயர்கள் எல்லாம் கற்பனைப் பெயர்கள் ; சம்பவங்களும் கற்பனையே.

"அவள் இந்த வீட்டின் வேலைக்காரி ஆனால்
அவள் என் இதய வீட்டின் எஜமானி"

ஸ்ரீ சுகுமாரின்

# விளையாட்டு பொம்மை

டைரக்ஷன்.
T.R.ரகுநாத்

மியூஸிக் டைரக்ஷன்
T.G.லிங்கப்பா




இப்பொழுது
தமிழ் நாடெங்கும்
வெற்றிகரமாக
நடைபெறுகிறது






மலர் 13 | இதழ் 43

தமிழ்த் திருநாடு தன்னைப் — பெற்ற
தாயென்று கும்பிடடி பாப்பா.
— பாரதியார்

# ஸ்ரீபிரகாசாவின் சேவை

சென்னை இராஜ்யம் பாரத தேசத்தின் தவப் புதல்வர்களில் ஒருவரான கனம் ஸ்ரீபிரகாசா அவர்களைக் கவர்னராகப் பெற்றுள்ள பாக்கியத்தைப் பெற்றிருக்கிறது.

காசி நகரைச் சேர்ந்த ஸ்ரீ பகவான் தாஸ் அவர்களின் பெயரை நேயர்களில் பலரும் அறிந்திருப்பார்கள். தேசத்துக்கும் சமூகத்துக்கும் அரும் பெரும் தொண்டுகள் புரிந்து ஆத்மீகத் துறையில் இன்று ஞான பரிபக்குவம் பெற்று விளங்கும் 'மகாபுருஷர்' என்று ஸ்ரீ பகவான் தாஸ் அவர்களைச் சொல்ல வேண்டும். அத்தகைய சிறப்பு வாய்ந்த பெரியாருடைய திருக் குமாரர் ஸ்ரீபிரகாசா.

பண்டித ஜவாஹர்லால் நேரு இளம் பிராயத்தில் ஆங்கில நாட்டில் மாணுக்கராக இருந்தபோது ஸ்ரீபிரகாசாவும் அங்கே கல்வி கற்கச் சென்றிருந்தார். இருவரும் அன்னிய நாட்டில் நண்பர்களானார்கள். இருவரும் இந்தியா தேசத்துக்குத் திரும்பிய பிறகு தேச விடுதலைப் போரில் ஈடுபட்டார்கள். நேருஜி எந்தெந்தப் போராட்டத்தில் கலந்து கொண்டாரோ, அந்தப் போராட்டங்களில் எல்லாம் ஸ்ரீபிரகாசாவும் முன்னணியில் நின்றார். நேருஜி எத்தனை தடவை சிறை சென்றாரோ, ஏறக்குறைய அத்தனை முறை ஸ்ரீபிரகாசாவும் சிறை புகுந்தார். இன்று உத்தரப் பிரதேசம் என்று வழங்கும் பழைய ஐக்ய மாகாணம் தேசியப் போரில் தீவிரமாக ஈடுபட்டதற்கு நேருஜியைப் போலவே ஸ்ரீபிரகாசாவும் காரண புருஷரா யிருந்தார். நேருஜி ஏதேனும் மிக முக்கியமான காரணத்துக்குத் தமது அந்தரங்க நம்பிக்கைக்குரியவர் ஒருவரை அனுப்ப விரும்பினால் அவருடைய நண்பர் ஸ்ரீபிரகாசாவையே முதலில் குறிப்பிடுவது வழக்கம்.

அத்தகைய முக்கியமான காரியம் ஒன்று சுமார் இரண்டரை வருஷங்களுக்கு முன்பு ஏற்பட்டது. சென்னை இராஜ்யத்தின் அரசியல் நிலைமை ஒரு நெருக்கடியான கட்டத்தை அடைந்திருந்தது. அச்சமயம் சென்னை இராஜ்யத்தின் கவர்னர் பதவியை வகிக்க ஆற்றலும் ஒழுக்கமும் சாதுர்யமும் வாய்ந்த தேசியத் தலைவர் ஒருவரை அனுப்ப நேருஜி விரும்பினார். அந்தக் கடினமான பொறுப்பை வகிக்க ஸ்ரீ பிரகாசாவைத் தேர்ந்தெடுத்தார்.

ஸ்ரீ பிரகாசா அப்போது தான் உத்தரப் பிரதேசத்தில் ஒரு முக்கியமான தொகுதியில் பார்லிமெண்டு சபைத் தேர்தலுக்கு நின்று, காங்கிரஸுக்கு எதிராக நின்ற வலிமை பொருந்திய அபேட்சகரைத் தோற்கடித்து, மகத்தான வெற்றி பெற்றிருந்தார். அவ்விதம் பெருமுயற்சி செய்து பெற்ற பார்லிமெண்டு பதவியை விடாதிருந்தால், ஸ்ரீ பிரகாசா இன்று நேருஜியின் மந்திரி சபையில் ஒரு முக்கியமான மந்திரியாக விளங்கியிருக்கக் கூடும். ஆனாலும், நேருஜியின் வேண்டுகோளைப் புறக்கணிக்க ஸ்ரீ பிரகாசா விரும்பவில்லை. சென்னை இராஜ்யத்தின் கவர்னர் பதவியை ஏற்றுக் கொண்டு வந்து சேர்ந்தார்.

சென்னை இராஜ்யத்தில் பொதுத் தேர்தலின் பயனாக ஏற்பட்டிருந்த சங்கடமான நிலைமையை ஸ்ரீபிரகாசா எவ்வளவு திறமையுடன் சமாளித்தார் என்பதை நாம் அறிந்திருக்கிறோம். நேருஜியின் நம்பிக்கைக்குப் பாத்திரமான ஒருவர் அச்சமயம் இங்கே கவர்னராயிருந்தபடியால்தான் சென்னை இராஜ்யம் அரசியல் குழப்பத்துக்கு ஆளாகாமல் தப்பியது.

*    *    *    *

கவர்னர் ஸ்ரீ பிரகாசா தாம் பதவி வகிக்கும் மிச்சமுள்ள காலத்தில் இந்த இராஜ்யத்துக்குச் சிறந்ததொரு சேவை செய்ய முன் வந்திருக்கிறார். தேச சுதந்திரத்தின் பிதாவாகிய மகாத்மா காந்திக்கு வட இந்தியாவில் முக்கியமான நகரங்களில் எல்லாம் ஞாபகச் சின்னங்கள் ஏற்படுத்தி விட்டார்கள். சென்னை நகரத்தில் இன்னும் காந்தி மகானுக்கு ஞாபகச் சின்னம் ஏற்படாம லிருக்கிறது. இக் குறையைத் தீர்த்துச் சென்னையிலும் மகாத்மா காந்தியின் ஞாபகச் சின்னம் நிறுவும் திருப்பணியை நடத்த ஸ்ரீபிரகாசா முன்வந்திருக்கிறார்.

கிண்டி – அடையாறு சாலையிலுள்ள ராஜ பவனத் தோட்டத்தில் மகாத்மா காந்தி ஞாபகார்த்தப் பிரார்த்தனை மண்டபம் கட்டப்பட்டு வருகிறது. அஸ்திவார வேலை பூர்த்தியாகிவிட்டது. மேலே கட்டிடம் எழுப்புவதற்குக் கருங்கல் திருப்பணி தொடங்கப்பட்டு நடந்து வருகிறது.

கிண்டி — அடையாறு சாலை வழியாகப் போகிறவர்கள், டாக்டர் அளகப்பா கல்லூரிக்கு எதிரில், 'கல்'. 'கல்' என்ற சத்தம் எழுவதைக் காது குளிரக் கேட்கலாம். தமிழ் நாட்டின் புராதன சிற்பக் கலைஞர்களின் வழியில் வந்தவர்கள் கல்லுளிகளைக் கொண்டு கருங்கல் திருப்பணி செய்து வரும் ஓசையைக் கேட்டு மகிழலாம்.

தமிழ் நாட்டின் புராதனமான சிற்பக் கலைக்கு இணங்கிய முறையில் பிரார்த்தனை மண்டபம் கட்டப்படுகிறது. அதே சமயத்தில், காந்தி மகானுடைய எளிய வாழ்க்கை முறைக்கு இணங்க, நுட்பமான வேலைப்பாடுகள் அதிகமில்லாமல், காந்தி ஞாபகார்த்தப் பிரார்த்தனை மண்டபம் கருங்கல் திருப்பணியாக அமைக்கப்படுகிறது.

இந்தத் திருப்பணியின் மேற் பார்வைப் பொறுப்பைக் கவர்னர் ஸ்ரீபிரகாசா அவர்களே நேர்முகமாக ஏற்றுக் கொண்டு சிரத்தையுடன் நடத்தி வருகிறார்கள்.

இந்த வாரத்து கல்கி அட்டையில் கவர்னர் ஸ்ரீபிரகாசாவையும், தேசத் தந்தையான காந்திமகானின் அருள் ததும்பும் திரு முகத்தையும் காணலாம்.

பிரார்த்தனை மண்டபம் முழுதும் கட்டப்படும்போது அதன் தோற்றம் எப்படியிருக்கலாம் என்பதன் அறிகுறியையும் நமது சித்திரக்காரர் காட்டியிருக்கிறார். (சித்திரத்தில் உள்ளது போலவே பிரார்த்தனை மண்டபம் சிறிதும் மாறுபடாமல் இருக்கும் என்று எண்ணி, கட்டிடக் கலை நிபுணர்கள் குறை கண்டு பிடிக்க முற்பட வேண்டாம். கட்டிடத் திட்டத்தை வைத்துக் கொண்டு நமது சித்திரக்காரர் உத்தேசமாகக் கற்பனை செய்து எழுதிய மண்டபம் நமது அட்டையில் காணப்படுகிறது. பிரார்த்தனை மண்டபத் திருப்பணி பூர்த்தியாகும்போது இதற்கும் அதற்கும் பல மாறுபாடுகள் இருக்கலாம்.)

* * *

ஸ்ரீ பிரகாசா அவர்கள் பிரார்த்தனை மண்டப நிதிக்காக விடுத்திருக்கும் வேண்டுகோளை எதிர்ப் பக்கத்தில் வெளியிட்டிருக்கிறோம். ஒரு ரூபாய் முதல் நன்கொடைகள் அனுப்பலாம் என்று கவர்னர் குறிப்பிட்டிருக்கிறார். இந்தப் புனிதமான கைங்கரியத்துக்கு ஒரு ரூபாய் நன்கொடை அளிக்க இயலாதவர்கள் தமிழ் மக்களில் யாரும் இருக்க முடியாது. "கல்கி" நேயர்கள் அனைவரும் இத் திருப்பணிக்கு விரைந்து முன் வந்து உதவ வேண்டுமென்று கேட்டுக் கொள்கிறோம். அவரவர்களுடைய இயல்புக்குத்தக்கபடி ஒரு ரூபாயோ அதற்கு மேற்பட்ட தொகையோ அனுப்பி இத் திருப்பணியில் பங்கு கொள்ளும்படி கோருகிறோம். மணியார்டர் மூலமாகவோ, செக் மூலமாகவோ தற்சமயம் உதகமண்டலத்திலுள்ள கவர்னர் ஸ்ரீபிரகாசாவுக்கே நேரில் அனுப்பி வைக்கலாம். அவர்கள் மனமுவந்து பெற்றுக் கொண்டு ரசீது அனுப்புவார்கள். நன்கொடையாளர்களின் பெயர்களும் தொகைகளும் பத்திரிகைகளிலும் வெளியிடப்படும்.

* * *

கவர்னர் ஸ்ரீபிரகாசாவின் வேண்டுகோளில் மகாத்மா ஞாபகார்த்தக் கமிட்டியைப் பற்றிக் குறிப்பிட்டிருக்கிறது. இக் கமிட்டி சுமார் நாலு வருஷங்களுக்கு முன்னுல் அப்போது முதன் மந்திரி பதவி வகித்த ஸ்ரீ பி. எஸ். குமாரசாமி ராஜா அவர்களைத் தலைவராகவும், சபா நாயகர் ஸ்ரீ ஜே. சிவசண்முகம் பிள்ளை அவர்களைப் பொக்கிஷதாரராகவும் மற்றும் ஸ்ரீ கே. காமராஜ நாடார், ஸ்ரீ எம். பக்தவத்ஸலம், ஸ்ரீ சி. சுப்பிரமண்யம், டாக்டர் செரியன் முதலிய பிரமுகர்களை அங்கத்தினராகவும் கொண்டு அமைக்கப்பட்டது. அக்கமிட்டியாரின் முயற்சியினுல் காந்தி ஞாபகார்த்த நிதிக்கு ஒரு லட்சம் ரூபாய்க்குக் கொஞ்சம் கூடுதலாக வசூல் செய்யப்பட்டது. (வசூல் விவரங்கள் அச்சமயம் "கல்கி"யில் வெளியிடப்பட்டு வந்தன.)

ஞாபகார்த்தக் கட்டிடம் எங்கே அமைக்க வேண்டும், எப்படி அமைக்க வேண்டும் என்று நிச்சயிக்கப் படாதபடியால், காந்தி மண்டப நிதி வசூல் தாற்காலிகமாக நிறுத்தி வைக்கப்பட்டது.

வசூலான தொகை ஒரு லட்சத்துச் சொச்சமும் பொக்கிஷதார் ஸ்ரீ ஜே. சிவசண்முகம் பிள்ளை அவர்களின் பேரில் இண்டோ-கம்மர்ஷியல் பாங்கியில் போடப்பட்டு வட்டியும் சேர்ந்து வந்தது.

கவர்னர் ஸ்ரீபிரகாசா அவர்கள் காந்தி மண்டபத் திருப்பணிப் பொறுப்பை ஏற்றுக் கொண்டதை முன்னிட்டு, மேற்படி தொகையை ஸ்ரீ பிரகாசா அவர்களிடம் சேர்ப்பித்து விடும்படி கமிட்டியார் தீர்மானித்தனர். அதன்படியே செய்யப்பட்டது.

* * *

காந்தி மகான் இந்தப் பாரத புண்ணிய பூமிக்குச் செய்துள்ள உதவிக்குச் சரித்திரத்தில் இணை எதுவும் கிடையாது. "பாரத நாட்டின் முப்பது கோடி மக்களையும் முப்பது கோடி புழுக்களாக அன்னிய நாட்டார் கருதுகிறார்களே!" என்று சுவாமி விவேகானந்தர் கதறினர். காந்தி மகான் பாரத தேசத்துக்கு உலகத்தின் முன்னணியில் மதிப்பை யளித்தார். பாரத மக்களுக்கு மனிதத் தன்மையை அளித்தார். நூற்றைம்பது ஆண்டு அன்னிய ஆட்சியில் அடிமைப் பட்டிருந்த நாட்டைச் சுதந்திர நாடாக்கி

# காந்தி மண்டப நிதி

## கனம் ஸ்ரீபிரகாசா வேண்டுகோள்

மகாத்மா காந்தி ஞாபகார்த்தமாகச் சென்னை நகரில் அவருக்குத் தக்க ஒரு நினைவுச் சின்னம் ஏற்படுத்துவதன் பொருட்டு 1949 நவம்பரில் சென்னையைச் சேர்ந்த பிரமுகர்கள் கொண்ட ஒரு கமிட்டி அமைக்கப்பட்டது. இந்தத் தலைமுறையும், எதிர் காலத் தலைமுறைகளும் தேசப் பிதாவின் நினைவுக்கு அஞ்சலி செலுத்தவும், அவரது பணியை நிறைவேற்றும் கடமையை நினைவில் வைத்துக் கொள்ளவும் அத்தகைய நினைவுச் சின்னம் அவசியம் என்று கருதப்பட்டது. ஜாதி, கொள்கை அல்லது இன வேறுபாடின்றி மக்கள் ஒன்று கூடிப் பொதுப் பிரார்த்தனைகள் நடத்தும் ஒரு பிரார்த்தனை மண்டப உருவத்தில் அந்த நினைவுச் சின்னம் இருக்க வேண்டுமெனக் கமிட்டி முடிவு செய்தது. எல்லா மதங்களையும் சேர்ந்த ஜனங்கள் ஒன்றுகூடி, மகாத்மா காந்தியின் உபதேசங்களையும், பணியையும் உணர்ந்து, அவற்றைப் பரப்பவும், தம் சொந்த வாழ்க்கையில் அவர் அருளிய அற நெறிகளைக் கடைப் பிடிக்கவும் அந்த ஞாபகச் சின்னம் வாய்ப்பு அளிப்பதாயிருக்கும்.

கிண்டியில், ராஜபவனத்தோட்டத்தில் வடகிழக்கு மூலையில் ஒதுக்கப்பட்டுள்ள பத்து ஏக்கர் நிலத்தில் பிரார்த்தனை மண்டபம் நிர்மாணிக்க முடிவு செய்யப்பட்டுள்ளது. கிட்டத்தட்ட நாலு லக்ஷம் ரூபாய் அதற்குச் செலவாகும் என மதிப்பிடப் பட்டுள்ளது. 1953-ம் ஆண்டு அக்டோபர் மாதம் பிரார்த்தனை மண்டபத்துக்கு அஸ்திவாரம் போடப் பட்டது; கட்டிட வேலை துரிதமாக நடந்து வருகிறது.

ஞாபகார்த்தக் கமிட்டி முதலில் வெளியிட்ட வேண்டுகோளுக்கிணங்க, அநேக பொது நிலயங்களும், தனிப்பட்ட ஸ்தாபனங்களும், தனிநபர்களும் தாமாக முன் வந்து தாராள நன்கொடைகள் வழங்கியதால் ஏற்கெனவே ஒரு லக்ஷம் ரூபாய்க்கு மேல் பணம் வசூலாகியுள்ளது. பிரார்த்தனை மண்டபத் திருப்பணி பூர்த்தியாக இன்னமும் கிட்டத் தட்ட மூன்று லட்சம் ரூபாய் வசூலாக வேண்டியிருப்பதால், ஞாபகார்த்த நிதிக்குத் தங்களாலான நன்கொடை வழங்குமாறு சென்னை ராஜ்ய மக்களுக்கு நான் இந்த வேண்டுகோளை வெளியிடுகிறேன். ஒரு ரூபாய்க்கு மேற்பட்ட - பெரிய அல்லது சிறிய நன்கொடை எதுவும் வரவேற்கப்படும். இது போன்ற ஒரு லட்சியத்தில் சாத்தியமான அளவு ஏராளமான மக்கள் தொடர்பு கொள்ளுவது பொருத்தமானது. அதுவே என் மனப்பூர்வமான விருப்பம்.

தனி நபர்களும், பொது ஸ்தாபனங்களும் நிதிக்குப் போதுமான நன்கொடைகள் வழங்குவதின் மூலம் இவ் வேண்டுகோளுக்கு அமோக ஆதரவளிப்பார்கள் என்று நான் உறுதியாக நம்புகிறேன்.

"இந்தியன் எக்ஸ்பிரஸ்", "தினமணி" பத்திரிகைகள் அன்பு கூர்ந்து தம் பத்திரிகைகள் மூலம் நிதி வசூலுக்கு ஏற்பாடு செய்யவும், நன்கொடைகள் பெறவும் முன் வந்துள்ளன. எனவே, நன்கொடைகளைச் சென்னையிலுள்ள "இந்தியன் எக்ஸ்பிரஸ்" அல்லது "தினமணி"க்கு அனுப்பி வைக்கலாம். அவை அவ்வப்போது நன்கொடையாளர்களின் பெயர்களைப் பிரசுரித்து, உரிய ரசீதுகளும் வழங்கும்.

உள்நாட்டுப் பகுதிகளிலுள்ள ஸ்தல பாங்குகள் நன்கொடைகள் பெறவும் ஏற்பாடுகள் செய்யப்பட்டு வருகின்றன. இதைப் பற்றியும், இந் நிதியின் சார்பில் நன்கொடைகள் பெற முன் வரும் பிற பத்திரிகைகள் பற்றியும் காலக்கிரமத்தில் தகவல் வெளியிடப்படும்.

நன்கொடையாளர் விரும்பும் பட்சத்தில் நன்கொடைகளை எனக்கு நேராக மணிஆர்டர், அல்லது செக் மூலம் அனுப்பி வைக்கலாம். "சென்னைக் கவர்னர் (காந்தி ஞாபகார்த்த நிதி)" என்ற பெயருக்குச் செக்குகள் அனுப்பலாம். அவற்றைப் பெற்றுக் கொண்டதற்கு நானே மகிழ்ச்சியுடன் பதிலளிப்பேன்.

மகாத்மா காந்தியின் ஞாபகார்த்த மண்டபம் அமைப்பதில் தங்கள் நன்கொடையும் பயன்பட வேண்டும் என நினைக்கும் ஒவ்வொருவரும் என் இந்த வேண்டுகோளுக்கு ஆதரவளிப்பார்கள் என்று நம்புகிறேன்.

சென்னை
24-4-54

ஸ்ரீ பிரகாசா
(சென்னைக் கவர்னர்)

னார். நாற்பது கோடி இந்திய மக்களைச் சுதந்திரப் பிரஜை களாக்கினார்.

"எந்நன்றி கொன்றார்க்கும் உய்வுண்டாம்; உய்வில்லை
செய்ந்நன்றி கொன்ற மகற்கு."

என்றார் திருவள்ளுவர் பெருமான்.

காந்தி மகாத்மா இந்த நாட்டுக்குச் செய்துள்ள நன்றியை இந்நாளில் வாழும் நாம் மட்டுமல்ல; பின்னால் ஆயிரம் பதினாயிரம் ஆண்டுகள் நம் சந்ததிகள் நன்றியுடன் நினைந்து வரவேண்டும். அதற்கு வேண்டிய திருப்பணியைக் காந்தி மகான் காலத்தில் வாழ்ந்த நாம் செய்து முடிக்க வேண்டும்.

"காந்தி மகான் தேச சுதந்திரத்துக்காக உயிர்த் தியாகம் செய்தார்" என்று சொல்ல முடியாது. ஏனெனில், காந்தி மகான் ஜீவிய வந்தரா யிருக்கும்போது நாடு சுதந்திரம் அடைந்து விட்டது; டில்லி மாநகரின் செங்கோட்டையில் அசோக சக்கரம் பொறித்த சுதந்திரக் கொடி ஏறிவிட்டது.

ஆனால் "காந்தி மகான் பிரார்த்தனைக்காக உயிர்த் தியாகம் செய்தார்" என்று சொல்வது மிகப் பொருத்தமா யிருக்கும்.

ஏனெனில், அவர் பிரார்த்தனைக் கூட்டத்தின் மத்தியில் பிரார்த்தனைக்குச் சென்ற இடத்தில் சதிகாரனுடைய கொடிய துப்பாக்கிக் குண்டுக்கு இரையானார்.

காந்தி மகான் பாரத நாட்டுக்கும் பாரத மக்களுக்கும் எத்தனையோ சேவைகள் செய்திருக்கிறார். அவற்றுள் எல்லாம் மிக மகோந்நதமானது, நிரந்தரமான பலனை மனித வர்க்கத்துக்கே அளிக்கக் கூடியது, அந்த மகா புருஷர் இறுதிக் காலத்தில் நடத்திய பிரார்த்தனைக் கூட்டங்களேயாகும்.

நாட்டில் வகுப்புத் துவேஷ வெறி கோர தாண்டவம் ஆடிக் கொண்டிருந்த சமயத்தில் மகாத்மா காந்தி தாம் நடத்திய பிரார்த்தனைக் கூட்டங்களில் எல்லா மதங்களும் போற்றும் இறைவன் ஒருவரே என்பதை உணர்த்த முயன்றார். ஹிந்துக்கள், முஸ்லிம்கள், கிறிஸ்துவர்கள், புத்தர்கள் முதலிய சகல மதத்தினரின் பிரார்த்தனை கீதங்களையும் பாடச் செய்தார். மனித குலத்தைச் சேர்ந்தவர்கள் எல்லாரும் ஒரே ஆண்டவனின் புதல்வர்கள், ஆதலால் மக்கள் அனைவரும் சகோதரர்கள் என்று கற்பிக்க முயன்றார். "ஒன்றே குலமும் ஒருவனே தேவனும்" என்னும் மகத்தான கொள்கையைப் பரப்பும் முயற்சியில் உயிர்த்தியாகம் செய்தார்.

இந்தக் கொள்கை உலகமுள்ள அளவும் மனித சமூகத்துக்கு இன்றியமையாத நிரந்தரமான பலன் அளிக்கும் கொள்கையாகும்.

ஆகையினால், காந்தி மகாத்மாவுக்கு மிகவும் தகுதியான ஞாபகச் சின்னம், அவருடைய போதனைப்படி சாதி, குல, சமய வேற்றுமை யின்றி அனைவரும் சேர்ந்து இறைவனை வழிபடுவதற்குரிய பிரார்த்தனை மண்டபமே யாகும் என்பதை ராஜாஜி அவர்கள் எடுத்துக் காட்டி யிருக்கிறார்.

இவ்வாறு ராஜாஜி அவர்களின் பரிபூரண ஆதரவைப் பெற்ற காந்தி மகான் ஞாபகார்த்தமான பிரார்த்தனை மண்டபத் திருப்பணிக்கு, நம் நேயர்கள் அனைவரும் தங்கள் இயல்புக்குத் தகுந்த நன்கொடைகளை அனுப்புமாறு கேட்டுக் கொள்கிறோம்.

ஸ்ரீ பிரகாசா அவர்கள் இந்த இராஜ்யத்தின் கவர்னரா யிருக்கும்போதே அவர் மேற்கொண்ட பிரார்த்தனை மண்டபத் திருப்பணி பூர்த்தி பெறுவதற்கு அனைவரும் உதவ வேண்டு மென்று கோருகிறோம்.

# கமிட்டி கண்ட குறுக்கு வழி!

*புது டில்லியில் நடந்த பேச்சு வார்த்தைகளின் பலனாக இந்தியாவுக்கும் இலங்கைக்கும் ஒப்பந்தம் ஏற்பட்டு மே மாதம் 18ந் தேதி மூடிய நாலு மாதங்களே ஆகின்றன.*

*இந்த நாலு மாதங்களுக்குள் ஒன்று இலங்கை இந்தியர்களின் நிலைமையில் அபிவிருத்தி ஏற்படுவதற்கு வழி பிறந்திருக்க வேண்டும்.*

*அவ்விதம் இல்லாவிடில், பழைய நிலைமைக்குப் பழுதில்லை என்று சொல்லும்படியாகவாவது இருக்க வேண்டும் அல்லவா!*

*ஆனால் அதற்கு மாறாக இலங்கை இந்தியர் பிரச்னை நாளுக்கு நாள் மோசமான கட்டத்துக்கு வந்துகொண் டிருக்கிறது. டில்லி ஒப்பந்தத்தினால் ஏற்பட்ட நம்பிக்கை நாளுக்கு நாள் சிதைந்து மறைந்து வருகிறது.*

*தங்களுடைய தர்ம நியாயமான உரிமைகளை இலங்கை சர்க்கார் அங்கீகரிக்கும் வரையில் இலங்கை இந்தியர்கள் மறுபடியும் போராடத் தீர உறுதி கொண்டிருக்கிறார்கள். மேற்படி போராட்டத்தைத் தீவிரமாக நடத்தப் பத்து லட்சம் ரூபாய் நிதி சேர்க்கவும் இலங்கை ஜனநாயக காங்கிரஸ் உத்தேசித் திருக்கிறது.*

*"இலங்கை சர்க்கார் இப்போது கைக்கொண்டுள்ள நடவடிக்கைகள் இந்தியர்களை இலங்கையிலிருந்து விரட்டுவதாக இருக்கின்றன; இந்தியா—இலங்கை ஒப்பந்த விதிகளுக்கு முற்றிலும் முரணாக இருக்கின்றன; நீதிக்கும் நியாயத்துக்கும் நேர் விரோதமாக இருக்கின்றன."*

*இவ்விதம் இலங்கை ஜனநாயக காங்கிரஸ் நிர்வாகக் குழுவிலும் ஏக மனதாகத் தீர்மானம் நிறைவேறி யிருக்கிறது.*

*பல்வேறு கட்சிகள் உள்ள சென்னை சட்டசபையில்கூட, இந்திய வம்சாவளியினரான இலங்கைப் பிரஜைகளின் நிலைமை மோசமாகி யிருப்பதைக் குறித்து, எல்லா அங்கத்தினர்களும் மாறுபாடு அபிப்பிராய பேதமுமின்றித் தங்கள் கவலையைத் தெரிவித்து, காரசாரமாகப் பேசி யிருக்கிறார்கள்.*

*ஒப்பந்தம் செய்து கொள்வது எதற்காக? மீறுவதற்காகத்தான் என்பது இன்றைய வல்லரசுகளின் சித்தாந்தமாக இருந்து வருகிறது.*

# அவருடைய பிரகாரங்களை :


















வல்லரசுகள் ஒரு புறம் ஒப்பந்தம் செய்து கொள்வதைப் பார்க்கிறோம். மற்றொரு புறம் அந்த ஒப்பந்தம் உருப்படாமல் போவதற்கான காரியங்களில் ஈடுபடுவதையும் காண்கிறோம். வல்லரசுகளின் அத்தகைய நவீன ராஜதந்திர முறையை இலங்கை சர்க்காரும் பின்பற்ற முற்பட்டிருப்பது மிகவும் வருந்தத் தக்கது.

டில்லியில் கைச்சாத்தான ஒப்பந்தத்தை அமுல் நடத்துவதற் குற்ற தகுந்த முறைகளைச் சிபார்சு செய்வதற்காக, இலங்கை சர்க்கார் சில மந்திரிகள் அடங்கிய கமிட்டியை நியமித்திருந்தார்கள். அந்தக் கமிட்டியார் இலங்கை இந்தியர் பிரச்னை தீருவதற்கான வழிகளைக் கூறலாம் என்ற நம்பிக்கை இருந்தது. ஆனால், அவர்கள் செய்துள்ள சிபார்சுகள் இலங்கை இந்தியர்கள் சம்பந்தப்பட்ட வரையில் எரியும் நெருப்பில் எண்ணெய் ஊற்றிய கதையாக முடிந்திருக்கிறது.

இலங்கையில் உள்ள இந்தியர்களில் எட்டு லட்சம் பேருக்கு மேல் பிரஜா உரிமைக்காக மனுச் செய்து கொண்டிருக்கிறார்கள். இவர்களில் இது வரை இருபத்தாறுயிரம் பேர்கள்தான் இலங்கைப் பிரஜைகளாகப் பதிவு செய்யப்பட்டிருக்கிறார்கள். தற்போதுள்ள நிலைமையில் அதிகமாகப் போனால் இரண்டரை லட்சம் இந்தியர்கள்தான் இலங்கைப் பிரஜைகளாகப் பதிவு செய்து கொள்ளப்படுவார்கள் என்று தெரிகிறது. எனவே, மீதியுள்ள ஐந்தரை லட்சம் பேர்களின் மனுக்கள் நிராகரிக்கப்பட்டு விடும்.

இந்த ஐந்தரை லட்சம் பேர்களும் இந்தியப் பிரஜைகளாகப் பதிவு செய்து கொண்டாலன்றி, அவர்களுக்கு இலங்கையில் வேலை எதுவும் கொடுக்கக் கூடாதாம். அவர்களுக்கு அரிசி ரேஷனும் மறுக்கப்படுமாம்.

இதுதான் இலங்கை மந்திரி சபைக் கமிட்டி செய்துள்ள சிபார்சுகளின் பலனாக ஏற்படக்கூடிய விபரீத நிலைமையாகும்.

டில்லி ஒப்பந்தத்தை நிறைவேற்றுவதற்கான யோசனைகளைக் கூற வேண்டிய கமிட்டியார், அதை உருக்குலைப்பதற்கான குறுக்கு வழியைக் கண்டு பிடித்துக் கூறியிருக்கிறார்கள்!

# களங்கத்தை உண்டாக்கும் காரியம்

இலங்கையில் உள்ள இந்திய வம்சாவளியினரை இந்தியப் பிரஜைகளாகும்படி வற்புறுத்த இந்திய சர்க்கார் விரும்பவில்லை. அதே சமயம், தாங்களாக வலுவில் இந்தியப் பிரஜைகளாக விரும்புவோரைத் தடுக்கவும் இந்திய சர்க்கார் உத்தேசிக்க வில்லை.

இதே முறையை இலங்கை சர்க்காரும் அனுஷ்டிக்க முற்பட்டால், இலங்கை இந்தியர் பிரச்னை சம்பந்தமான சிக்கல்கள் தீர்ந்து விடும்.

அதாவது இந்தியப் பிரஜைகளாகும்படி எவரையும் வற்புறுத்தக் கூடாது; இலங்கைப் பிரஜைகளாக விரும்புவோரைத் தடுக்கவும் கூடாது.

இந்தியப் பிரஜையாக விரும்பாதவரை வற்புறுத்துவது கூடாது என்று இலங்கை - இந்தியா ஒப்பந்தத்தில் சிறிதும் சந்தேகத்துக்கு இடமின்றிக் குறிப்பிட்டிருக்கிறது.

அப்படி யிருந்தும் இலங்கை சர்க்கார் அவ்வாறு வற்புறுத்துவதற்கான, இலங்கைப் பிரஜைகளாவதற்கு உரிமையுள்ளவர்களை இந்தியாவுக்கு விரட்டுவதற்கான காரியங்களைச் செய்து வருகிறார்கள். கடைசியாக, இலங்கை சர்க்கார் கைக் கொண்டுள்ள முறை சுமார் ஆறு லட்சம் இலங்கை இந்தியர்களுக்கு உணவையே மறுப்பதாக இருக்கிறது.

இந்திய வம்சாவளியினரை அவர்களுடைய இஷ்டத்துக்கு முற்றிலும் விரோதமாக இந்தியாவுக்குச் செல்லும்படி வற்புறுத்த உணவு ரேஷனை மறுப்பதைக் காட்டிலும் பயங்கரமான ஆயுதம் வேறு என்ன இருக்க முடியும்?

இலங்கை சகல உரிமைகளும் உள்ள சுதந்திர நாடு. எனவே உள் நாட்டில் அதன் இஷ்டப்படி எத்தகைய முறைகளையும் எடுத்துக் கொள்ள இலங்கை சர்க்காருக்கு அதிகாரம் உண்டு என்பதை இந்திய சர்க்கார் மறுக்கவில்லை.

எனினும், லட்சக்கணக்கானவர்களுக்கு ஜீவாதார உரிமைகள் மறுக்கப்படுவதையும், அவர்களை அவர்களுடைய இஷ்டத்துக்கு விரோதமாக இலங்கை சர்க்கார் இந்தியாவுக்கு விரட்ட முற்படுவதையும் இந்தியா மௌனமாகப் பார்த்துக் கொண்டிருக்க முடியுமா!

தலைமுறை தலைமுறையாக இலங்கையில் வாழ்ந்து இலங்கைப் பிரஜைகளாவதற்கு உரிமையுள்ளவர்களை, அவர்களுடைய அபிலாஷைக்கு விரோதமாகவும் இந்தியாவின் இஷ்டத்துக்கு விரோதமாகவும் வெளியேற்றி, இந்தியாவுக்கு அனுப்ப முற்படுவதை எந்த விதத்திலும் நியாயமானது என்று உலகம் ஒப்புக் கொள்ளாது.

இந்தியா—இலங்கைப் பிரச்னையைத் தீர்க்க வேண்டும் என்ற அக்கறையுடன் இலங்கைப் பிரதமர் சர் ஜான் கொத்தலாவலை டில்லியில் பேச்சு வார்த்தைகள் நடத்த முன்வந்து ஒப்பந்தம் செய்து கொண்டது அவரது புகழை அதிகமாக்கியது.

இப்போது இலங்கை சர்க்கார் செய்து வரும் காரியங்களோ வென்றால், அவர்களுக்குக் களங்கத்தை உண்டாக்குவதாக இருக்கின்றன; லக்ஷக்கணக்கான மக்களுக்கு அநீதி இழைப்பதாக இருக்கின்றன; இந்தியாவுக்கும் இலங்கைக்கும் உள்ள நல்லுறவைப் பாதிப்பதாக இருக்கின்றன.

# ஜனநாயகம் வளர்கின்றது

மத்தியப் பிரதேசத்தைச் சேர்ந்த பந்தரா தொகுதிகளிலிருந்து இந்தியா பார்லிமெண்டுக்கு ஏற்கெனவே இரண்டு காங்கிரஸ் அங்கத்தினர்கள் தேர்ந்தெடுக்கப் பட்டிருந்தனர். அவர்களுடைய தேர்தல் முடிவு செல்லாது என்று தேர்தல் நீதிச் சபை தீர்ப்புக் கூறி விட்டதால், அத் தொகுதிகளில் சில தினங்களுக்கு முன் உப தேர்தல் நடந்தது. மேற்படி தேர்தலில் பொதுத் தொகுதியில் காங்கிரஸ் அபேட்சகருக்குப் போட்டியாக நின்ற பிரஜா சோஷலிஸ்ட் கட்சித் தலைவர் ஸ்ரீ அசோக மேத்தா, காங்கிரஸ் அபேட்சகரைக் காட்டிலும் இருபத்தையாயிரத்துக்கு மேல் அதிக வாக்குகள் பெற்று வெற்றி அடைந்தார். நிசர்வ் தொகுதியில் காங்கிரஸ் அபேட்சகருக்கு எதிராக நின்ற டாக்டர் அம்பேத்கார், எண்ணாயிரம் வாக்குகளுக்கு மேல் குறைவாகப் பெற்றுத் தோல்வி

அடைந்தார். சென்ற பொதுத் தேர்தலிலும் டாக்டர் அம்பேத்கார் வெற்றி பெறவில்லை என்பது குறிப்பிடத் தக்கது.

பாரத நாட்டில் ஜனநாயக முறை எப்படி வளர்ந்து வருகிறது என்பதற்கு மேற்படி தேர்தல் முடிவுகள் அளவுகோல் ஆகும் எனலாம். ஜனங்கள் அபேட்சகர்களின் தராதரத்தை நன்கு சீர் தூக்கி வோட்டுக் கொடுக்க முற்பட்டிருக்கிறார்கள் என்பதையே அம் முடிவுகள் காட்டுகின்றன. இனி பிரசார வித்தையினால் ஜனங்களை மயக்க முடியாது; பொதுத் தொண்டில் உண்மையான பற்றுதல் உள்ளவர்களே, பொது ஜனங்களின் அபிமானத்துக்குப் பாத்திரர்களாகிப் பொதுத் தேர்தலில் வெற்றி பெற முடியும் என்பதும் மேற்படி தேர்தல்களிலிருந்து வெளியாகிறது. சுதந்திர இந்தியாவில் ஜனநாயக விருட்சம் வேரூன்றி வளர்ந்து வருகிறது என்பதற்கு இதைக் காட்டிலும் அத்தாட்சி வேறு என்ன வேண்டும்!

# திடுக்கிடச் செய்யும் பதில்

**ப**ல ஆண்டுகள் பாடுபட்டு, பணத்தைச் செலவழித்து, சர்வகலாசாலைப் பரீட்சைகளில் தேறிப் பட்டம் பெற்றும் வேலையில்லாமல் கஷ்டப்படுவோர் இந்தியாவில் ஏராளமாக இருக்கின்றனர். ஆனால் இஞ்ஜினீயரிங், வைத்தியம் போன்ற கலைகளில் தேர்ச்சி பெற்றுப் பட்டம் பெற்றவர்களிடையே வேலையில்லாத் திண்டாட்டம் இருப்பதற்குக் காரணம் இல்லை என்று பலரும் நினைத்து வந்திருக்கலாம். சென்னை சட்டசபையில் சில தினங்களுக்கு முன் கேட்கப்பட்ட கேள்விக்குக் கைத்தொழில் மந்திரி அளித்த பதில், அத்தகையோரைத் திடுக்கிடச் செய்திருக்கும்.

வேலையற்றோருக்கு வேலை தேடித் தரும் பணியில் ஈடுபட்டுள்ள வேலைப் பதிவு ஸ்தாபனங்கள் (Employment Exchanges) இருக்கின்றன அல்லவா! அவற்றில் இந்த மாகாணத்திலிருந்து 1137 பி. ஏ. பட்டதாரிகள், 12 வைத்தியக் கல்லூரிப் பட்டதாரிகள், 59 சிவில் இஞ்ஜினீயரிங் பட்டதாரிகள், 23 மின்சார இஞ்ஜினீர்கள். 36 மெகானிகல் இஞ்ஜினீர்கள் முதலியோர் பதிவு செய்து கொண்டிருப்பதாகக் கைத்தொழில் மந்திரி அறிவித்தார். இவர்களைத் தவிர, சர்க்கார் தொழில் கல்விச் சாலைகளில் தேறியவர்களிலும் 174 பேர் மேற்படி ஸ்தாபனத்தில் பதிவு செய்து கொண்டிருப்பதாகத் தெரிவித்தார்.

வேலைப் பதிவு ஸ்தாபனங்களில் பதிவு செய்து கொண்டிருப்போரைக் காட்டிலும் பதிவு செய்து கொள்ளாதவர்களின் தொகை இன்னும் அதிகமாக இருக்கும் என்பதில் சந்தேகமில்லை. இஞ்ஜினீயரிங் கல்லூரியில் தேறிப் பட்டம் பெற்ற நிபுணர்களே வேலையில்லாமல் வேலைப் பதிவு ஸ்தாபனத்தில் தங்களைப் பதிவு செய்து கொள்ளும்படியான நிலைமை ஏற்பட்டிருக்கிறதென்னில், மற்றவர்களைப் பற்றிக் கேட்க வேண்டியதில்லை. எஸ். எஸ். எல். ஸி. தேறி. வேலையில்லாமல் கஷ்டப்படுவோரின் தொகை லட்சத்துக்கு மேல் இருக்கலாம். ஏனெனில், வருஷா வருஷம் அரை லட்சத்துக்கு மேற்பட்ட மாணவர்கள் எஸ். எஸ். எல். ஸி. பரீட்சையில் தேறுகிறார்கள். அவர்களில் சில ஆயிரம் பேர்கள்தான் கலாசாலைகளில் சேர முடியும். மற்றவர்களில் பாதிப் பேருக்குக்கூட வேலை கிடைக்கும் என்று சொல்லுவதற்கில்லை. பி. ஏ., எம். ஏ., முதலிய பட்டங்களைப் பெற்ற பட்டதாரிகளே வேலைக்காக அலையப் போது, எஸ். எஸ். எல். ஸி. படித்தவர்களின் நிலைமையைக் கேட்கவா வேண்டும்!

இந்த நிலையில் வருஷா வருஷம் புதிய கலாசாலைகளை ஆரம்பித்துக் கொண்டே போகிறார்கள். இதன் விளைவாக, எதிர் காலத்தில் எளிதில் சமாளிக்க முடியாத பெரும் விபரீதம் ஏற்படலாம். கையில் உள்ள சரக்கை விற்க முடியாத நிலையில் இருக்கும் வியாபாரி, மேலும் மேலும் புதிதாகச் சரக்கைத் தருவித்துக் கொண்டேயிருந்தால், முடிவு என்ன ஆவது!

# ஏழை நோயாளிகளுக்கு இடமில்லை

**தா**ம்பரம் க்ஷயரோக ஆஸ்பத்திரியில் 1952-ம் வருஷம் சிகிச்சைக்காக 1691 பேர்கள் பதிவு செய்து கொண்டனர்; 1953-ல் 2223 பேர்கள் பதிவு செய்து கொண்டனர்; இந்த வருஷம் பதிவு ஜாபிதாவில் யாருமே இல்லை என்று ஆரோக்கிய மந்திரி ஸ்ரீ ஷெட்டி சென்னை சட்டசபையில் கூறினார்.

வியாதிகளுக்குள்ளேயே கொடியது க்ஷயரோகம் தான். மேற்படி ரோகம் இந்தியாவில் அதிகமாக இருக்கிறது என்றும், அந்த ரோகத்துக்குச் சிகிச்சை செய்வதற்குப் போதிய ஆஸ்பத்திரிகள் இல்லை என்றும் இடைவிடாது கூறி வருகிறார்கள். அப்படியிருக்க, இந்த வருஷம் தாம்பரம் க்ஷயரோக ஆஸ்பத்திரியில் இடம் பெறப் பதிவுசெய்து கொண்டவர்கள் யாருமே இல்லை என்று மந்திரி சொல்லியிருக்கிறார். இதற்குக் காரணம், இலவச சிகிச்சைக்காக வரும் ஏழைகளைப் பரிசோதித்துப் பதிவு செய்துகொள்ள முடியாது என்று ஆஸ்பத்திரி நிர்வாகிகள் விரட்டி அடித்து விடுவதுதான் என்று ஊகிக்கலாம்.

தாம்பரம் க்ஷயரோக ஆஸ்பத்திரி போன்ற சர்க்கார் ஆஸ்பத்திரிகளில் பணக்காரர்கள்தான் சிகிச்சை செய்து கொள்ள முடிகிறது, ஏழைகளுக்கு அங்கு இடமில்லை என்று சொல்லி விடுவதாகப் புகார்கள் கூறப்படுகின்றன.

நியாயமாக, பொதுப் பணத்தைக் கொண்டு நிர்வகிக்கப்படும் சர்க்கார் ஆஸ்பத்திரிகளில் ஏழைகளுக்கே முதலில் இடம் கொடுக்கப்பட வேண்டும். பணக்காரர்கள் தனிப்பட்ட டாக்டர்களிடமும் ஸ்தாபனங்களிலும் பணம் கொடுத்துச் சிகிச்சை பெறலாமே!

க்ஷயரோக சிகிச்சைக்காகப் பதிவு செய்து கொண்ட நோயாளிகளில் பலருக்கு, சிகிச்சை செய்து கொள்ள வரும்படி அவர்கள் இறந்த பின் சர்க்கார் கடிதங்கள் அனுப்பியது உண்மையா என்று ஓர் அங்கத்தினர் சட்டசபையில் கேட்டார் எனில், க்ஷயரோக ஆஸ்பத்திரியின் நிர்வாகம் எவ்வளவு இலட்சணமாக இருந்து வருகிறது என்பதை ஊகித்துக் கொள்ளலாம்.

இந்த நிலையில், க்ஷயரோக ஆஸ்பத்திரிப் பதிவு ஜாபிதாவில் யாருடைய பெயரும் இல்லை என்று சொல்லுவதைக் காட்டிலும், மேற்படி ஆஸ்பத்திரியை மூடி விட்டு, ஒரே அடியாக "க்ஷயரோகமே இல்லை" என்று சாதித்து விடலாமே!

# கையைக் கழுவினார்கள்!

சென்னை சர்க்கார் ராஜாஜியின் புதிய கல்வித் திட்டத்தைக் கடலில் போட்டு விட்டுக் கூவம் நதியில் கையைக் கழுவிக் கொண்டார்கள்! அந்தப் புதிய திட்டத்தில் லவலேசமும் கையில் ஒட்டாத படி நன்றாகக் கையைக் கழுவி விட்டார்கள்!

ரொம்பச் சரியான காரியம்! "செய்வன திருந்தச் செய்!" என்பதற்கிணங்க, ஒரு காரியத்தைக் கைவிடுவதாயிருந்தால் அடியோடு கைவிடுவதுதான் சரி. அரைகுறையாக வைத்துக் கொண்டு அவஸ்தைப்படுவதில் பயனில்லை.

புதிய திட்டத்தை நடத்தி வைப்பதற்குத் தகுந்த சூழ்நிலை நாட்டில் இல்லை, போதிய ஆதரவு இல்லை. எதிர்ப்பு அதிகம் இருந்தது என்றெல்லாம் கல்வி மந்திரி காரணம் கூறினார்.

புதிய திட்டம் உத்தேசித்த பலன்களைத் தருவதற்கு நாட்டில் சூழ்நிலை சரியாக இல்லை என்பது முற்றும் உண்மை.

ஆனால் பொது ஜனங்களின் ஆதரவு எவ்வளவு இருந்தது எதிர்ப்பு எவ்வளவு இருந்தது என்பதை நிர்ணயிக்கப் போதிய ஆதாரங்கள் இல்லை. அதை அறிய முயற்சியும் செய்யப்படவில்லை.

எதிர்ப்பு உண்மையாகக் கல்வித் திட்டத்துக்கு எதிர்ப்புத்தானா அல்லது அவலை நினைத்து உரலை இடிப்பது போன்ற எதிர்ப்பா என்பதையும் நிச்சயமாக நிர்ணயிக்க முடியாது.

ராஜாஜி முதன் மந்திரியாக இருப்பதை விரும்பாதவர்கள் புதியகல்வித்திட்டத்தை வியாஜமாகக் கொண்டு எதிர்ப்புக் கிளர்ச்சியை நடத்தினார்கள்.

புதிய கல்வித் திட்டம் இல்லாவிட்டால், வேறு காரணத்தைக் கண்டு பிடித்திருப்பார்கள்.

புரட்சிகரமான புதிய திட்டம் எதற்கும் ஓரளவு எதிர்ப்பு ஏற்படுவது இயல்பு. எதிர்ப்பைச் சமாளித்துப் புதிய திட்டத்தின் பலன்களை நிரூபித்துக் காட்டிப் பொதுமக்களை ஒப்புக் கொள்ளச் செய்வதற்கு ஆற்றல் வேண்டும்; அவகாசம் வேண்டும்; பற்றற்ற மனப்பான்மை வேண்டும்.

"நாளைக்கு நம்முடைய அரசியல் வாழ்வு என்ன ஆகிறது என்ற கவலையில்லாதவர்கள், என்னைப் போல் அரசியல் வாழ்விலிருந்து விலகிக் கொள்ளச் சித்தமாயிருப்பவர்கள்தான் அம்மாதிரி புரட்சிகரமான மாறுதல்களைக் கொண்டு வந்து சாதிக்க முடியும்" என்று ராஜாஜியே கூறினார்.

ஆகவே அவர் கொண்டு வந்த திட்டத்தை,—எதிர்ப்புக் கிளர்ச்சிக்கு இடமான திட்டத்தை,—அவருக்குப் பின்னால் வந்தவர்கள் நடத்தி வைப்பார்கள் என்று எதிர்பார்க்க முடியாது.

ஆகவே புதிய மந்திரி சபை ராஜாஜியின் கல்வித் திட்டத்தைக் கைவிட்டது பற்றி வியப்பு அடைவதற்கு இல்லை; குறைப்படுவதற்கும் இல்லை.

*  *  *

புதிய மந்திரி சபை ராஜாஜியின் கல்வித் திட்டத்தைக் கைவிட்டது ராஜாஜிக்கு ஒரு தோல்வி என்று சிலர் கருதலாம்.

ஏன்! ராஜாஜிக்கு அது 'ஒரு மகத்தான தோல்வி' என்று சொல்வதும் மிகையாகாது.

ஆனால் ராஜாஜி தம் வாழ்க்கையில் எத்தனையோ மகத்தான வெற்றிகளையும் கண்டிருக்கிறார்; தோல்விகளையும் கண்டிருக்கிறார்.

வெற்றியும் தோல்வியும் அவரைச் சிறிதும் பாதிப்பதில்லை. வெற்றியைக் கண்டு அவர் மகிழ்வதும் பெருமையடைவதும் கிடையாது; தோல்வியைக் குறித்து வருந்துவதும் கிடையாது.

தேச முன்னேற்றத்துக்கும் பொது மக்களின் நலத்துக்கும் உகந்த காரியங்களைச் செய்வதிலே தான் அவருக்கு உற்சாகம், மகிழ்ச்சி எல்லாம்.

அவருடைய தோல்விகள் பல, பிற்காலத்தில் மகோன்னதமான வெற்றிகளாக முடிந்திருக்கின்றன என்பதை நினைவு கூர்ந்தால் போதுமானது.

*  *  *

புதிய காங்கிரஸ் மந்திரிசபை ராஜாஜியின் கல்வித் திட்டத்தைக் கை விட்டது குறித்துக் காங்கிரஸ் எதிரிகளான திராவிடக் கழகத்தார் குதூகலமடைந்து அதைத் தங்களுக்கு ஒரு மாபெரும் வெற்றியாகக் கொண்டாடுகிறார்கள்.

அவர்கள் வேறு எதைக் கொண்டாடுவார்கள்! அவர்களுடைய சாதனைகளைக் குறித்துக் கொண்டாடுவதற்கு இல்லை.

ஆசையால் இதையாவது கொண்டாடலாமே என்று கொண்டாடுகிறார்கள்.

இந்தக் கொண்டாட்டங்களைப் பார்த்துவிட்டுக் காங்கிரஸ் வாதிகள் பலர்,

"எல்லோரும் இன்புற்றிருக்க நினைப்பதுவே
அல்லாமல் வேறொன்று அறியேன் பராபரமே!"

என்று தாங்களும் சந்தோஷமடைகிறார்கள்.

திராவிடக் கழகத்தார் வெற்றிக் கொண்டாட்டங்கள் நடத்துவது மட்டுமல்ல; ஸ்ரீ காமராஜரின் மந்திரி சபைக்குத் தங்களுடைய மேலான ஆதரவை அளிக்கவும் முன் வந்திருக்கிறார்கள். சென்னைக் கடற்கரையில் நடந்த பொதுக்கூட்டத்தில் ஸ்ரீ ஈ. வே. ரா. அவ்விதம் மனமுவந்து கூறியதாகப் பத்திரிகைகள் வெளியிட்டிருக்கின்றன.

இதைப் பார்க்கும் போது, ராஜாஜி தமக்குப் பின்னால் தொடரும் காங்கிரஸ் மந்திரி சபைக்கு எவ்வளவு மகத்தான உதவி செய்திருக்கிறார் என்பது நன்கு வெளியாகிறது.

ஓமந்தூர் ரெட்டியாரும், ஸ்ரீ குமாரசாமி ராஜாவும் காங்கிரஸ் முதன் மந்திரிகளாயிருந்து ஆட்சி நடத்தினார்கள். அப்போதெல்லாம் காங்கிரஸ் மந்திரி சபைக்குத் திராவிடக் கழகத்தாரின் ஆதரவு கிடைத்ததா! இல்லை. பொதுத் தேர்தலில் காங்கிரஸ் அபேட்சகர்களை முறியடிப்பதில் அவர்கள் முன்னணியில் நின்றார்கள்.

அதே திராவிடக் கழகத்தார் இப்போது ஸ்ரீ காமராஜரின் மந்திரி சபையை உற்சாகமாக ஆதரிக்க முன் வந்திருக்கிறார்கள்! இந்த அதிசயம் எவ்விதம் நேர்ந்தது!

ராஜாஜி ஒரு புதிய கல்வித் திட்டத்தைக் கொண்டு வந்து, அதற்கு எதிர்ப்புக் கிளர்ச்சிகள் தீவிரமாக நடந்து, ஸ்ரீ காமராஜரின் மந்திரி சபை அத்திட்டத்தைக் கை விட்டதனால் திராவிடக் கழகத்தாரின் ஆசியும் ஆதரவும் புதிய மந்திரி சபைக்குக் கிடைத்திருக்கிறது!

ஆகவே ராஜாஜி தாம் முதன் மந்திரியாயிருந்த போது காங்கிரஸுக்குத் தொண்டு செய்து அந்த ஸ்தாபனத்தைப் பலப்படுத்த முயன்றது மல்லாமல், தமக்குப் பின்னால் காங்கிரஸுக்குப் பலம் சேர்வதற்கும் ஏற்பாடு செய்து விட்டுப் போனதாக ஏற்படுகிறது.

இதை உத்தேசிக்கும் போது, ராஜாஜி கல்வித் திட்டம் போன்ற இன்னும் நாலைந்து திட்டங்களை வெளியிட்டிருக்கக் கூடாதா என்றும் தோன்றுகிறது.

அப்படிச் செய்திருந்தால், புதிய மந்திரி சபை அத் திட்டங்களை ஆறு மாதத்துக்கு ஒன்றாகக் கைவிட்டுக் காங்கிரஸ் எதிரிகளின் ஆதரவை கெடுதிலும் தேடிப் பெறுவதற்கு ஒத்தாசையாயிருக்கும் அல்லவா! அடுத்த பொதுத் தேர்தல் வரையில் இம்மாதிரி கைவிட்டுக் கொண்டே போய்க் காங்கிரஸுக்கு எதிர்ப்பே இல்லாமல் செய்து விட எவ்வளவு சௌகரியமாக இருந்திருக்கும்!





★ தேசிய இளைஞர் காங்கிரஸ், பாரத தேசிய வாலிபர் சங்கம் ஆகிய இரு சங்கங்களின் சார்பில் மே மீ 12உ சென்னை செயின்ட் மேரீஸ் மண்டபத்தில் ''காந்தி மண்டபத் திருப்பணி''ப் பொதுக் கூட்டம் நடைபெற்றது. ராஜாஜி உடல்நிலை சீர்பெற்ற பிறகு அவர் பேசிய இந்த முதற் பொதுக் கூட்டத்துக்கு ஏராளமான அன்பர்கள் திரண்டு வந்திருந்தார்கள். மண்டபத்துக்குள் பொது மக்கள் நெருக்கியடித்து உட்கார்ந்திருந்ததுடன் மண்டபத்துக்கு வெளியிலும் ஆயிரக் கணக்கானவர்கள் நின்று கொண்டிருந்தார்கள். ராஜாஜி மண்டபத்துக்குள் பிரவேசித்த போது கடலில் எழும் அலை ஓசையைப் போல் ஜயகோஷம் எழுந்தது. இந்த மாபெரும் கூட்டத்துக்குச் சபாநாயகர் திரு சிவஷண்முகம் பிள்ளை தலைமை வகித்தார்.

''பிரார்த்தனைக் கூட்டங்களின் மூலம் பக்தியையும் சமூக ஒற்றுமையையும் வளர்ப்பதற்கும் காந்தி மகான் கடைசிக் காலத்தில் பாடுபட்டார். பிரார்த்தனைக்காகவே அவர் உயிர் துறந்தார். ஆகவே அவருக்குத் தக்க ஞாபகச் சின்னம் ஒரு பிரார்த்தனை மண்டபம்தான். அத் திருப்பணி பூர்த்தி ஆவதற்குத் தமிழ் மக்கள் அனைவரும் உதவி செய்ய வேண்டும்'' என்று ராஜாஜி பேசியதைத் தொடர்ந்து, ஸ்ரீ சா. கணேசனும், ஸ்ரீ எஸ். ராமசாமி நாயுடுவும் உண்டியலை எடுத்துக் கொண்டு கூட்டத்தில் நிதி வசூல் செய்தனர். ராஜாஜியும் ஸ்ரீ சிவஷண்முகம் பிள்ளையும் முதன் முதலாக உண்டியில் நன்கொடை செலுத்தி நிதியை ஆரம்பித்து வைத்தார்கள்.

கூட்டத்தில் நிதிமந்திரி ஸ்ரீ சுப்பிரமண்யம், ஸ்ரீ எஸ். என் சோமயாஜுலு, ஸ்ரீ சா. கணேசன், ஸ்ரீ எஸ். ராமசாமி நாயுடு, ஸ்ரீ டி. செங்கல்வராயன் ஆகியோர் பேசினார்கள். முடிவில் ஸ்ரீ கொத்தமங்கலம் சுப்பு அருமையாகக் காந்தி மகான் காலட்சேபம் செய்தார்.






# கைத்தறி துணிகளை
## வாங்குங்கள்

### இந்திய நெசவாளர்களுக்கு நம்பிக்கை யூட்டுங்கள்

**கைத்தறிகளை ஆதரியுங்கள்— பாரத நாட்டின் சிறுதொழில்களுக்குள் முதன்மையானது இதுவே.**

**கைத்தறிகளே மக்களின் ரஸிகத்தன்மையை வளர்க்க மிகவும் உதவுகின்றன.**

*"கிராம சுபிட்சமே சமுதாயத்தில் நீதி நிலவுவதற்கு அடிப்படையானது. கிராமியத் தொழிலாளிகளும் நாட்டு வளப்பத்தில் மேலும் அதிகப் பங்கு பெறுவதற்கு வேண்டிய ஊக்கமும் வசதியும் வழங்க வேண்டியது அவசியம்."*

**எஸ். ராதாகிருஷ்ணன்**
உப ஜனாதிபதி, இந்திய யூனியன்

---

சென்னை, பம்பாய், குவாலியர், நாகபுரி, காசி மற்றும் கல்கத்தாவில் பொருக்கி யெடுத்த கைத்தறி ஜவுளி ரகங்களைக் காட்சியில் வைப்பதற்காக, அகில இந்திய கைத்தறி போர்டாரால் ஷோரூம்கள் திறக்கப்பட்டு வருகின்றன. இந்த ஷோரூம்களில் தமது உற்பத்திப் பொருள்களைக் காட்சியில் வைக்க விரும்பும் கைத்தறி ஜவுளி உற்பத்தியாளர்கள் மேலும் விவரமறிய, டைரக்டர், சென்டிரல் மார்செடிங் ஸ்தாபனம், 34, பாந்தியன் ரோடு, எழும்பூர், மதராஸ் என்ற விலாசத்தில் விசாரிக்கவும்.

AC: 562

ஆடல் பாடல்

# பக்திமயமான நாடகம்

## பகீரதன்

தேனாம்பேட்டைக் காங்கிரஸ் திடலின் திறந்த வெளியில் நாடக அரங்கு அமைக்கப் பெற்றிருக்கிறது. ஜிலு ஜிலு என்று இயற்கைக் காற்று வீசுகிறது. ஆயிரக்கணக்கான மக்களுடன் நானும் அந்தத் திறந்த வெளி அரங்கில் அமர்ந்திருந்தேன். "டாண்! டாண்!" என்று மணி ஆறு முறை அடித்து ஓய்ந்தது. சூரியன் மறைந்து விட்டான். எதிரில் இருந்த நாடக மேடையிலிருந்து சாம்பிராணிப் புகை "குப், குப்" என்று கிளம்பிச் சுகந்த மணம் பரப்பியது. வாத்தியங்கள் பரபரப்பாக ஒலிக்கத் தொடங்கின. திரைக்கு இடுக்கில் இருந்து ஒரு கை ஐந்து முகத் தீபத்தை ஏந்தித் தீபாராதனை செய்தது. நாடகத் திரை தூக்கப்பட்டது. நாடகம் ஆரம்பமாகி விட்டது. அதற்குப் பிறகு நாடகம் நடந்த நாலு மணி நேரமும் கண் கொட்டாமலும், கவனத்தை அப்படியும் இப்படியும் திருப்பாமலும் பிரமிக்க வைக்கும் நாடகக் காட்சிகள் ஒன்றின்பின் ஒன்றாகத் தொடர்ந்து வருகின்றன.

பெரிய திரையின் மத்தியில் ஒரு சிறிய துவாரம் தோன்றுகிறது. அந்தத் துவாரத்தில் விக்னங்களை எல்லாம் தீர்த்து வைக்கும் விக்கினேசுவரர் பாலவடிவும் இனிய முகத்துடன் காட்சி அளிக்கிறார். கல்லுப் பிள்ளையார் மாதிரி ஆடாமல் அசையாமல் உட்கார்ந்திருக்காமல் தாளத்துக்கு ஏற்ற வண்ணம் அழகாக ஆடுகிறார். இந்த ஆரம்பக் காட்சியே மிக அழகான காட்சி. மனத்தை விட்டு அகல முடியாத காட்சி.

நாடகக் கதை பழைய கால புராணத்தில் ஆரம்பமாகிறது. மத்தியில் ராஜா ராணி கதையாக மாறுகிறது. கடைசியில் திருவாங்கூர் ராஜ்யத்தில் உள்ள சபரிமலை ஐயப்பன் கோயிலுக்கு நூற்றுக் கணக்கான பக்தர்கள் பரவசத்துடன் யாத்திரை சென்று ஐயப்பனைத் தரிசித்து மகிழ்கிறார்கள்.

தேவர்களும் அசுரர்களும் பாற்கடலைக்கடைந்து அமுதம் எடுக்கிறார்கள். அமிர்தம் முழுவதும் தங்களுக்கே வேண்டும் என்று அசுரர்கள் சண்டை பிடிக்கிறார்கள். அந்தச் சண்டையைத் தீர்க்க மகாவிஷ்ணு மோகினி அவதாரம் எடுக்கிறார். தேவாசுரர்கள் சண்டையைத் தீர்த்து வைத்து அமுதத்தை தேவர்களுக்கு வழங்கி விடுகிறார்.

மகாவிஷ்ணுவின் மோகினி அவதாரத்தைக் கேள்விப்பட்ட பரமேசுவரன் அங்கு வருகிறார். மோகினி அவதாரத்தைக் கண்டு ஈசுவரன் மோகித்து விடுகிறார். அதுகாரணமாக ஹரிக்கும் ஹரனுக்கும் பிள்ளை இல்லாப் பெருங் குறையைத் தீர்த்து வைக்க ஹரிஹர புத்திரன் அவதரிக்கிறான்.

குழந்தையே இல்லாத பந்தள நாட்டு மன்னன் காட்டுக்கு வேட்டையாட வருகிறான். அந்தக் குழந்தையைக் காண்கிறான். களிப்புடன் எடுத்துச் சென்று "மணிகண்டன்" என்று திருநாமம் சூட்டி வளர்க்கிறான். மணிகண்டன் வந்த சில காலத்துக்குப் பிறகு மன்னனுக்குச் சொந்தக் குழந்தை பிறக்கிறது. மணிகண்டன் பள்ளிக்கூடத்தில் படிக்கும்போதே உபாத்தியாயரின் குழந்தைக்கு இருந்த குருடு, செவிடு, மூடம், ஊமை முதலிய பிறவி ஊனங்களை யெல்லாம் குணப்படுத்தி விடுகிறான்.

பந்தள நாட்டு இரண்டாவது மந்திரி மன்னன் அறியாமல் மக்களுக்குப் பல கெடுதல்கள் செய்கிறான். மக்களைக் கொடுமைப் படுத்துகிறான். "கள்ளுக் குடிக்காதே!" என்று பிரசாரம் செய்யும் உத்தமத் தொண்டர்களைச் சவுக்கால் அடித்துச் சித்திரவதை செய்கிறான். இந்தக் கொடிய செயலைக் கண்ட மணிகண்டன் மந்திரியைக் கண்டிக்கிறான். இதனால் மந்திரிக்கு மணிகண்டன் மீது வெறுப்பு ஏற்படுகிறது. அவனை ஒழித்துக் கட்டச் சதி செய்கிறான். மந்திரவாதியை அழைத்து வந்து மந்திரத்தினால் மணிகண்டனைக் கொல்லும்படி ஏவுகிறான். அது பலிக்கவில்லை. மகாராணியின் அந்தரங்கத் தோழியின் மூலம் மகாராணியின்



நவாப் ஸ்ரீ டி. எஸ். ராஜமாணிக்கம்

மனத்தை மந்திரி மாற்றிவிடுகிறான். மந்திரியின் மோச வலையில் மகாராணி சிக்கி விடுகிறாள். தனக்குத் தீராத தலைவலி என்று துடிதுடிக்கிறாள். புலிப் பால் வந்தால்தான் தலைவலி தீரும் என்கிறாள். மணிகண்டன் புலிப்பால் கொண்டு வரக் காட்டுக்குப் போகிறான்.

இது இப்படி யிருக்க, மகரிஷி தத்தாத்ரேயரால் "மகிஷியாகப் போவாய்!" என்று சாபம் பெற்ற ரிஷி பத்தினி எருமை மாடாக மாறி விடுகிறாள். இந்திரனையும் தேவர்களையும் துரத்தி விட்டுத் தேவலோக சிம்மாசனத்தில் வீற்றிருக்கிறாள். மகிஷியின் ஆட்சியில் நல்லவர்கள் எல்லாம் நலம் குலைந்து நிற்கிறார்கள். மகிஷியைக் கொன்று அவர் சாபத்தைப் போக்கி நல்லவர்களைக் காப்பாற்றுகிறான் மணிகண்டன். பின்னர் இந்திரனைச் சிங்கமாகவும் மற்ற தேவர்களைப் புலிகளாகவும் ஆக்கிச் சிங்கத்தின்மீது அமர்ந்து புலிகள் புடை சூழ மணிகண்டன் பந்தள நாட்டுக்கு வருகிறான். "வேண்டிய மட்டும் புலிப்பால் இருக்கிறது; எடுத்துக் கொள்ளுங்கள், தாயே!" என்று தன்னை வளர்த்த அன்னை மகாராணியைப் பார்த்துக் கூறுகிறான்.

இந்த அற்புதத்தைக் கண்ட பந்தள நாட்டு மன்னன் மணிகண்டனைப் பார்த்து, "நீ யார்? உண்மையைச் சொல்! நீ சாதாரண மனிதன் அல்ல!" என்று கதறுகிறான். மணிகண்டன் தான் ஹரிஹர புத்திரன் என்பதைத் தெரிவித்து, "இந்தப் பூவுலகத்தில் நான் இருக்க வேண்டிய காலம் முடிந்து விட்டது!" என்று சொல்லி விட்டு மறைந்து விடுகிறான். மணிகண்டன், மறைந்தவுடனே பந்தள நாட்டு மன்னன் "ஐயா! அப்பா! ஐயப்பா! நீ எங்கே போனாய்?" என்று அலறித் துடித்துப் புலம்புகிறான். அதிலிருந்து ஹரிஹரபுத்திரன் "ஐயப்பன்!" ஆகிறார்.

பந்தள நாட்டு மன்னன் கொடிய மிருகங்கள் வசிக்கும் காட்டைக் கடந்து, பெரிய பெரிய இடையூறுகளையெல்லாம் தாண்டிச் சென்று, பொறாமையால் தன்னைக் கொல்ல வந்த இந்திரனையும் வென்று மலையுச்சியில் ஐயப்பனுக்குக் கோயில் கட்டி முடிக்கிறான்.

தீவிர வைஷ்ணவர் ஒருவரின் வயிற்றுவலி ஐயப்பன் விபூதிப் பிரசாதத்தைச் சாப்பிட்டவுடனேயே நீங்கி விடுகிறது. (இது உண்மையாக நடந்த சம்பவம் என்று நாடகத்தில் அறிவிக்கப் படுகிறது.) இம்மாதிரி பக்தர்களுக்குப் பலப் பல நன்மைகளைப் புரிந்து கொண்டு இன்றைக்கும் ஐயப்பன் சபரி மலையில் கோயில் கொண்டிருக்கிறார்.

இவ்வாறு புராண கால நிகழ்ச்சிகளையும், தற்கால நிகழ்ச்சிகளையும் சேர்த்துப் புனைந்த வரலாற்றை அடிப்படையாகக் கொண்டு, "ஐயப்பன்" நாடகத்தை விறுவிறுப்புடனும் உணர்ச்சி பாவத்துடனும் பக்திப் பெருக்குடனும் மதுரை பால விநோத சங்கீத சபையார் நடத்துகிறார்கள். இந்திர ஜால மகேந்திர ஜாலத்தைப்போல் காட்சிகள் மாறும் அதிசயத்தைச் சொல்லி முடியாது.

நாடகத்தில் வரும் ஒவ்வொரு காட்சிக்கும் பொருத்தமான கண்ணுக்கு இனிய பின்னணி ஜோடனைகள். இந்தத் துறையில் அவர்கள் கையாண்டிருக்கும் நவீன உத்திகளின் திறமைகளை நேரில் பார்த்துத் தான் அநுபவித்து மகிழ வேண்டும்.

நவாப் ஸ்ரீ டி.எஸ். ராஜமாணிக்கத்தின் நாடகக் கலைத் திறமை இந்த நாடகத்தில் பரிபூரணமாக மிளிர்கிறது. நாடகத்தில் ஒரு மந்திரவாதி வருகிறான். அவன் ஒரு கோலை ஆட்டித் திமர் என்று இருட்டாக்கி விடுகிறான். உடனே வெளிச்சம் வரச் செய்கிறான். அந்த மந்திரவாதிக்கெல்லாம் பெரிய மந்திரவாதியாக நவாப் ஸ்ரீ ராஜ



நாடகத்துக்குத் திரளாக வந்திருந்த ரஸிக மகாசபையில் ஒரு தோற்றம்.

மாணிக்கம் விளங்குகிறார் என்று எண்ணி வியக்கும்படி இருக்கிறது, அவர் நாடக மேடையில் காட்டிய நாடகக் கலை ஜாலங்கள். அந்தச் சின்னஞ் சிறு நாடகமேடையில் விண்ணை அளாவும் மாட மாளிகை கூட கோபுரம் நிறைந்த பட்டணம் தோன்றுகிறது. அடுத்த கணம் கொடிய வன விலங்குகள் வாழும் காடு காட்சி யளிக்கிறது. அந்தக் காடு மறைந்து தேவலோகம் வருகிறது. தேவலோகத்தில் இந்திரன் தன் ஐராவதமாகிய வெள்ளை யானையில் பவனி வருகிறான். வான வீதியில் குதிரை பறக்கிறது. யானைகள் கூட்டம் கூட்டமாகச் செல்கின்றன. புலிக் கூட்டம் வருகிறது. சிங்கம் கர்ஜிக்கிறது. இந்தக் காட்சிகள் எல்லாம் பார்ப்பவர்கள் பிரமிக்கும் வண்ணம் திறமையாகத் தயாரிக்கப் பட்டிருக்கிறது.



தேவலோக வீதியில் இந்திரன் வெள்ளை யானையில் பவனி வருகிறான்.

நாடகத்தில் நடித்தவர்கள் எல்லாரும் நன்றாக நடிக்கிறார்கள். நடிகர்கள் மட்டும் தானா? இந்திரனை ஏற்றி வரும் வெள்யானை, ஹரிஹரசுதனை அவன் மனைவிமார்களுடன் சுமந்து கொண்டு வான வீதியில் பறந்து வரும் குதிரை, பக்தர்களுக்கு வழிவிட்டு விலகும் யானைக் கூட்டம், மணிகண்டனைச் சுமந்து வந்த சிங்கம், அவனை வளர்த்த அன்னையின் தலைவலி தீர்க்கப் பால் வழங்க வந்த புலிக் கூட்டம், இந்திரனைத் துரத்தி விட்டுத் தேவலோக சிம்மாசனத்திலமர்ந்து ஆட்சி புரிந்த எருமை எல்லாமே அருமையாக நடித்துச் சபையோரின் குதூகலப் பாராட்டுதல்களைப் பெறுகின்றன.

மலையாளத்து மாந்திரீகனின் நடிப்பு அபாரம். அவன் கண்கள் சுழலும் சுழற்சியும், கைகள் வீசும் வீச்சும், கால்கள் போடும் குதியும் "ஓம், ரீம், தாம், திம், டாம், டும்" என்று போட்ட மந்திரமும் ஹாஸ்யச் சுவையுடன் துள்ளிக் குதித்துக் கொண்டு வந்தன.

ஐயப்பன் வேடத்தில் வந்த அந்தச் சின்னஞ் சிறு பாலகனின் முகத்திலேதான் என்ன தெளிவு! என்ன பாவம்!

தேவலோகத்தின் வீதியில் தேவர்கள்புடை சூழ வெள்ளை யானையில் கம்பீரமாகத் தேவேந்திரன் அமர்ந்து வரும் காட்சியும், புலிகள் சூழ்ந்துவர சிங்கத்தின் முதுகில் மணிகண்டன் உட்கார்ந்து வரும் கோலமும், மிகக் கவர்ச்சிகரமாக இருக்கின்றன. சபையில் "ஆகாகா!" என்ற வியப்புக் குரல்கள் எழுகின்றன. புலிகள் கூட்டம் வந்தவுடன் நாடகத்துக்கு வந்திருந்த குழந்தைகளும், பெரியவர்கள் சிலரும் பயந்து பின்னால் நகர்ந்ததும் பலவாறு அதைப் பற்றிப் பேசிக் கொண்டதும் ரஸிக்கும்படியா யிருந்தன.

கானகத்தின் மத்தியில் பளபள வென்று ஒளிவீசி மின்னும் பொற்கோயிலில் ஹரிஹர சுதன் அமர்ந்து தேவர்களுக்குத் தரிசனம் அளிக்கும் காட்சி கண்கொள்ளாக் காட்சி. இந்தச் சமயத்தில் அந்தப் பெரிய சபையில் வியப்பும் திகைப்பும் அமைதியும் ஆனந்தமும் நிலவித் துலங்குகிறது.

ஐயப்பன் நாடகத்தின் கடைசிக் காட்சி, நாடகம் பார்ப்பவர்களின் மனத்தைத் தொட்டுப் பிடித்து இழுத்து விட்டது. நூற்றுக் கணக்கான மக்கள் தலையில் மூட்டை முடிச்சுக்களைச் சுமந்து கொண்டு கொடிய வனவிலங்குகள் நிறைந்த காட்டுக்குள் தங்களையும் மறந்து பக்தி பரவசத்துடன் "சாமி! சரணம் ஐயப்பா!" "ஹரிஹர சுதனே, ஐயப்பா!" "சாமியோ, சரணம் ஐயப்பா!" என்று கோஷித்துக் கொண்டு சபரி மலைக்குச் செல்லுகிறார்கள். பெரிய காட்டு யானைகளும், கொடிய புலிகளும் "ஐயப்பன்" கோஷத்தைக் கேட்டு ஒதுங்கிச் செல்லுகின்றன. இந்தக் காட்சி சபையில் ஒரு கிளர்ச்சியையே உண்டாக்கி விட்டது. நாடகத்துக்கு வந்திருந்த ஒரு பெரியவர் தம்மையும் மறந்து "சாமியோ! சரணம் ஐயப்பா!" "சரணம்! சாமி ஐயப்பா!" என்று வாய்விட்டே கோஷித்துக் கண்களை மூடித்

# அபாய கட்டம்!




இந்தோ - சீனாவில் பிரஞ்சு சைன்யத்துக்கும் சுதந்திர வியட்மின் படைகளுக்கும் நீண்ட நாளாக நடந்து வரும் யுத்தம் இப்போது ஒரு நெருக்கடியான கட்டத்தை அடைந்திருக்கிறது.

---

தியானத்தில் இருந்த காட்சி நாடகத்தின் உணர்ச்சிக்கு ஒரு அத்தாட்சியாக இருந்தது.

** ** **

இவ்வளவு பக்தி ரஸம் நிறைந்து ததும்பும் "ஐயப்பன்" நாடகத்தைச் சென்னை மக்களுக்குப் பரிசளித்து வரும் நவாப் ராஜமாணிக்கம் அவர்கள் நாடகக் கலை மூலம் தமிழ் நாட்டுக்குக் கடந்த நாற்பதாண்டுகளாக அற்புதமான முறையில் தொண்டாற்றி வருகிறார். பக்தியின் மூலமாகத்தான் மக்களுக்குள் ஒற்றுமையை உண்டாக்க முடியும் என்னும் உயர்ந்த கருத்துக்கு இணங்கப் பக்திப் பெருக் கெடுத்தோடும் பல அருமையான நாடகங்களை நடத்திப் பொது மக்களால் பாராட்டப் பெற்றவர். "நாடகக் கலையரசு" "நாடகக் கலாநிதி" "நாடகக் கேசரி" முதலிய பட்டங்கள் பெற்றவர். சினிமா என்னும் பெரும் புயலால் நாடகம் என்னும் மங்களத் தீபம் அணைந்து விடாமல் பாதுகாத்து வரும் நாடகக் கலைஞர்களில் நவாப் ஸ்ரீ டி. எஸ். ராஜமாணிக்கம் தலை சிறந்து விளங்குகிறார். "ஸ்ரீ கிருஷ்ண லீலா" "பக்த ராமதாஸ்" "சம்பூர்ண ராமாயணம்" "குமார விஜயம்" "ஏகநாதர்" முதலிய பக்தி நிறைந்த சிறந்த நாடகங்களின் மூலமாகத் தமிழ் நாட்டில் பெரும் புகழ் பெற்றவர். நல்ல காரியங்களுக் கெல்லாம் வரையாது வழங்கியவர். சுமார் 250 பேர் உள்ள நாடகச் சபைக் குடும்பத்தை எத்தனையோ கஷ்டங்களுக்கு மத்தியில் நடத்தி வரும் தீரர். ஏராளமான பொருள் நஷ்டம் ஏற்பட்டாலும் அதையெல்லாம் லட்சியம் செய்யாமல் நாடகக் கலைக்குத் தொடர்ந்து தொண்டாற்றி வரும் உண்மைக் கலைஞர்; பரம பக்தர்; நாட்டுப் பற்று மிக்கவர்.

அவருடைய உயர்ந்த சேவையை, நாடகக் கலைக்காக நாற்பது ஆண்டுகள் பணியாற்றி வரும் சிறப்பைப் பாராட்டி அவருக்கு வாழ்த்துக் கூற வேண்டியது தமிழ் மக்களின் கடமையல்லவா? அதற்காகப் பல பிரமுகர்கள், எல்லாத் துறையிலும் ஈடுபட்டுள்ள பிரபலஸ்தர்கள் சேர்ந்த ஒரு குழு அமைக்கப் பெற்றிருக்கிறது. அந்தக் குழுவினர் தமிழ் மக்களுக்குக் கீழ்க் கண்ட வேண்டுகோளை விடுத்திருக்கின்றனர் :—

"தமிழ் மக்களே! எல்லாரும் வாருங்கள்! நாடகக் கலை வாழ்க என்று முழங்கி ஸ்ரீ நவாப் ராஜமாணிக்கம் அவர்களுக்கு மரியாதைகள் செய்வோம்."

இந்த வேண்டுகோளுக்குக் கலை உள்ளம் படைத்த ரஸிகத் தமிழ் மக்கள் செவிமடுத்து ஸ்ரீ நவாப் ராஜமாணிக்கம் அவர்களின் பாராட்டு விழா சிறப்பாக நடைபெறுவதற்கு உதவி புரிவார்கள் என்று நம்புகிறோம்.

சாமியே, சரணம் ஐயப்பா!

V. 9246

# மூன்று விதங்களில் பணி செய்யும்

# மோபிலாயில்

## உபயோகித்து

### 3 வழிகளில் உங்கள் காருக்கு பாதுகாப்பளியுங்கள்!

1. **மோட்டாரின் உறுப்புகள் விரையமாகாதபடி காப்பாற்றுகிறது.** எப்படியென்றால் அது எல்லா வித சீதோஷ்ண நிலைக்கும் அனுசரித்து சரியான படி எண்ணெயைப் படியவைக்கிறது.
2. **பழுதுருவண்ணம் இஞ்சினைக் காப்பாற்றுகிறது.** இஞ்சினில் கெடுதலை விளைவிக்கும் கார்பன் படிமானம் ஏற்படாதபடி உதவுகிறது.
3. **பெட்ரோலை சிக்கனமாய்ச் செலவழிக்க உதவுகிறது.** உலோகங்களிலுள்ள உறுப்புகளை அமிலங்கள் சாப்பிட்டு இஞ்சினில் சக்திக்குறைவு ஏற்படக்காரணமின்றி செய்கிறது.




# மோபிலாயில்




எங்கெல்லாம் பறக்கும் செங்குதிரையின் அடையாளத்தை பார்க்கிறீர்களோ அங்கு அசல் மூன்று விதங்களில் பணி செய்யும் மோபிலாயில் கிடைக்கும்.

**ஸ்டாண்டர்ட்-வாக்குவம் ஆயில் கம்பெனி**

(கம்பெனி அங்கத்தினர்களின் பொறுப்பு வரையறுக்கப்பட்டது)

# சக்கரவர்த்தித்

**ராஜாஜி**

## 1. வால்மீகியும் கம்பரும்

**ஆ**ண்டவன் விளையாட்டின் ரகசியத்தை யாரே அறிவார்! நம் செயல்கள் அனைத்தும் அவ் விளையாட்டில் அடங்கிய அற்ப பாகங்கள். வால்மீகி பாடிய ராம சரித்திரத்தைத் தமிழ் மக்களுக்கு எளிய பேச்சு நடையில் சொல்லலாம் என்று எண்ணி ஆரம்பிக்கிறேன். கம்பர் பாடிய அவையடக்கத்தை வைத்துச் சொல்லுகிறேன்: பெரும் பாற் கடலை ஒரு பூனையானது மெள்ள உருட்டிக் குடித்து விடலாம் என்று பார்ப்பது போலாகும் நான் வால்மீகி ராமாயணத்தை எளிய முறையில் சரியாக எடுத்துச் சொல்ல முயல்வது. ஆயினும் கடலைத் தாண்டிய ஆஞ்சனேயன், யார் ராம கதையை எந்த விதமாகச் சொல்ல முயன்றாலும் உதவுவான்.

பக்தியுடன் ஒருவன் செய்யும் பணியில் பெரியோர்கள் குற்றம் பார்க்க மாட்டார்கள். உற்சாகப்படுத்தி, பணியைப் பயன்படும்படியே செய்வார்கள்.

**பி**ராணிகளுக்கு எலும்பும் சதையும் இருப்பது போல் தாவரங்களுக்கும் உண்டு. சில தாவரங்களுக்கு நம்மைப் போல் உள்ளே எலும்பும் வெளியே சதையும் இருக்கும். வேறு சிலவற்றிற்கு உள்ளே சதையும் வெளியே எலும்பும் அமைந்திருக்கும்.

மா, பலா, புளி, தேக்கு முதலிய மரங்களின் சதை அவற்றின் பச்சைப் பட்டை. மரத்தின் உயிர்ச் சத்து பட்டையின் வாயிலாகவே செல்கிறது. மரத்தின் உள்ளே நின்று பாரத்தைத் தாங்கும் நடு மரமே அதனுடைய எலும்பாகும். ஆனால் மரத்துக்கு வேண்டிய உயிர்ச் சத்து மரத்தின் பச்சைப் பட்டையில் தான் பாய்ந்து வருகிறது.

எலும்பு உள்ளேயும் உயிர்ச் சத்து பச்சைப் பட்டையிலுமாக இந்த வகைத் தாவரங்களின் ஜீவனம் நடைபெறுகிறது. இதற்கு நேர்மாறாக இருப்பது வாழை, தென்னை, பனை, கமுகு, நெல், புல், சோளம், கரும்பு இவைகளின் அமைப்பு. வெளிப் புறத்தில் எலும்பு. உள்ளே தண்டில் உயிர்.

பனை, தென்னை, வாழை, கரும்பு இவ் வகைத் தாவரங்களைப் போல் பிராணி வர்க்கத்திலும் ஆமை, சங்கு, சிப்பி, கிளிஞ்சல் முதலிய பிராணி வகைகள், உள்ளே உயிரும் வெளியே ஓடுமாக இருக்கின்றன. கிளிஞ்சல், சங்கு முதலிய பொருள்களை நாம் அந்தப் பிராணிகள் செத்த பின்னரே உபயோகப் படுத்துகிறோம். ஆனால் நீரில் உயிருடன் வாழும்போது ஓட்டிற்குள் உயிரும் சதையும் இருக்கும். நம்முடைய எலும்பு உள்ளே இருப்பது போல் இவற்றின் வெளியோடு அவற்றின் எலும்பு. உயிரும் உணர்ச்சியும் சதையும் ஓட்டிற்குள் மூடிக் காக்கப்பட்டிருக்கும்.

**இ**வ்வாறே நூல்களையும் இரு வகையாக வகுக்கலாம். ஒரு வகைக்குச் சொல்



# திருமகன்

ளுக்குள் மூடிக் கிடக்கும் பொருளே உயிர். மற்றொரு வகைக்கு வடிவமே உயிர். விஷயங்களை விளக்கித் தரும் நூல்களான ரசாயனம், வைத்தியம், தேச சரித்திரம், பூகோளம், கணிதம் முதலியவை நூல்களின் பொருளில் உயிர் கொண்ட வகை. பாடல்களும் பெருங் காவியங்களும் பொருளுக்குக் கவிஞர் தந்த வடிவழகிலேயே தம் உயிரை வைத்து நிற்கின்றன.

செய்யுளைப் பிரித்து உரை நடையில் எழுதினால் அந்தப் பொழிப்புரையில் உயிர் இருக்காது. கவிஞர் கொடுத்த வடிவத்தைச் சேதித்து விட்டால் உயிர் மாண்டு போகிறது. ஒரு கணித நூல் அல்லது வைத்திய நூல் அவ்வாறு அல்ல. மனனம் செய்வதற்காக அதற்கு ஆசிரியர் செய்யுள் வடிவம் தந்திருந்தாலும் — பழைய நாட்டுக் கணித நூல்களும் வைத்திய நூல்களும் இவ்வாறே அமைக்கப்பட்டு வந்தன — அவற்றை விரித்து உரை நடையில் எழுதினாலும் அதன் உயிர் நீங்காது. பொருளிலே உயிர் இடப்பதால் பொருளோடு உயிர் இணைந்து நிற்கும்.

கம்பன் பாட்டையோ அல்லது பாரதியார் பாட்டையோ உரை நடையில் எழுதினால் பொருளுக்குச் சேதமில்லை. ஆனால் உயிரில்லாத உடல் தான் நிற்கும். உயிரிழந்த பிராணியைப் போல் உரை நடையில் மாற்றி எழுதிய பாடல் கிடக்கும். அதனோடு பதவுரையும், 'விசேஷ' உரையும், இலக்கணக் குறிப்பும் எழுதி விட்டாலோ அது சவச்சோதனை ஆலயமாகத்தான் பயன்படும். பிரேத சோதனையில் அறிவு வளர்ச்சிக்கு மிக்க பயன் உண்டு.





தஞ்சை ஜில்லா, தப்பளாம்புலியூர் பிரபல மிராசுதார் ஸ்ரீ டி. என். கிருஷ்ணமூர்த்தி அய்யர் பி. எஸ்ஸி. (ஹானர்ஸ்) அவர்கள் குமாரி **சௌ. சிவகாம சுந்தரிக்கும்** மேற்படியூர் பிரபல மிராசுதார் **ஸ்ரீ வி. கல்யாணராமனுக்கும் 5-5-54-ல்** தப்பளாம்புலியூரில் வெகு விமரிசையாகத் திருமணம் நடந்தேறியது. திருமணத் துக்கும், அன்று மாலை நடந்த ஸ்ரீமதி எம். எல். வஸந்தகுமாரியின் சங்கீதக் கச்சேரிக்கும் 9-5-54-ல் மணமகன் இல்லத்தில் நடந்த ஸ்ரீ டி. ஆர். பாலசுப்ர மணியம் அவர்களின் இன்னிசை விருந் துக்கும், ஏராளமான பிரமுகர்கள் விஜயம் செய்து தம்பதிகளை ஆசீர்வதித்தனர்.

வாழ்க மணமக்கள்!

---

ஆனால் அழகில்லை; ஒளி யில்லை; உயி ரில்லை; பாடலின் தனிப் பயன் இல்லை.

யானை இருந்தாலும் ஆயிரம் வெள்ளி, இறந்தாலும் ஆயிரம் வெள்ளி என்பது போல் சில நூல்கள் இரு விதத்திலும் பயன் தரும். காவியங்களையும் பாடல் களையும் அன்னியருக்காக மொழிபெயர்ப் பது தற்கால வழக்கத்தில் பதிந்து போயிருக்கிறது. தமிழருங்கூடக் கம்பனை யும் பாரதியையும் திருக்குறளையும் ஆங் கிலத்தில் மொழி பெயர்ப்பதில் ஈடுபடு கிறார்கள். சில தமிழர் அவ்விதம் மொழி பெயர்த்ததைப் படிப்பதிலும் ஈடுபடு கிறார்கள். வால்மீகியை நான் சொல் வதும் இந்தக் கணக்கே. ஆனால் மொழி பெயர்த்த ராமாயணத்துக்கும் இறந்து போன யானையைப் போல் கொஞ்சம் விலையுண்டு என்பதைச் சொல்லி விளக்கு வதற்காகவே இந்த நீண்ட முன்னுரை.

• • •

**வா**ல்மீகி பகவான் ராமாயணம் பாடிய காலமும், ஸ்ரீ ராமச்சந்திரன் அவதரித்து இம் மண்ணுலகில் வாழ்ந்த காலமும் ஒன்றே என்பது புராணம் வாசிப்பவர்களுடைய பரம்பரைக் கொள்கை. உலக அனுபவத்தை வைத்து ஆராய்ந்து யோசித்தால், வால்மீகி ரிஷி யானவர் ராமாயணம் பாடியதற்கு முன்னமேயே, அதாவது புராதன காலந் தொட்டே, சீதாராம சரித்திரம் மக்க ளிடை எழுத்து வடிவம் பெறாமலே பல நூற்றாண்டுகள் வாய்வழிக் கதை யாக வழங்கி வந்திருப்பதாகத் தோன்று கிறது. கர்ண பரம்பரையாக, முன்ன மேயே இருந்த ராம சரிதத்தை எடுத்துக் கொண்டு அதற்கு வால்மீகி பகவான் நூல் வடிவம் கொடுத்தாற் போல் தோன்றுகிறது. இதனாலேயே கதையில் பல சிக்கல்கள் ஏற்பட்ட தென்றும் ஊகிக்கலாம். வாலியைக் கொன்ற முறை —அதில் நாம் காணும் நியாயக் குறை. சீதையைக் காட்டுக்கு அனுப்பிய அநீதி. இவை போன்ற இன்னும் பல சிக் கல்கள். வால்மீகி ரிஷியின் காவியத்தில் இராமன் ஒரு மகா புருஷன். ஈசுவர அவதாரமாக வைத்து எழுதவில்லை.

சில அதிகாரங்களிலும், இங்குமங்கும் சுலோகங்களிலும் தெய்வ அவதார விஷ யத்தைச் சொல்லி வந்தாலும், மொத்தத் தில் மேலே சொன்னபடி வால்மீகி ராமா யணத்தில் காணப்படும் ராமன் ஒரு சிறந்த ராஜகுமாரன், வீர புருஷன், அபூர்வமான தெய்வீக குணங்கள் பெற்ற வன். அம்மட்டே; கடவுள் அல்ல.

வால்மீகி முனிவரின் காலத்திலேயே ஸ்ரீராமனைப் பற்றி அவதாரக் கொள்கை ஓரளவு ஜனங்களின் மனத்தில் இருந்து வந்தது. வால்மீகி ராமாயணம் இயற்றிப் பல நூற்றாண்டுகளுக்குப் பிறகு, கம்ப ரும் துளசி தாஸரும் ராமாயணம் பாடி னார்கள். இதற்குள் மகாவிஷ்ணுவின் அவதாரமே ஸ்ரீராமன் என்பது நாட் டிலே நன்றாக ஊர்ஜிதப்பட்டுப் போன கொள்கையாகி விட்டது. ராமன் என்றா லும் கிருஷ்ணன் என்றாலும் மகாவிஷ் ணுவே; மகா விஷ்ணு என்றால் ராமனே, கிருஷ்ணனே — இந்த நிலைக்கு ஜனங் களின் கொள்கை வந்துவிட்டது. இதற்கு ஏற்ப பக்தியும் கோயில்களும் வழிபாடும் ஏற்பட்டு ஸ்திரமாகி விட்டன.

மக்களுடைய நம்பிக்கையும் வழி பாடும் இவ்வாறு பரிணமித்து விட்ட பிறகு, கம்பரோ துளசிதாஸரோ மீண் டும் ராமனை எப்படி வெறும் வீரனாக வைத்துப் பாட இயலும்? அப்படிப் பாட முயன்றாலும் அது வீணாகும். கம்ப ரும் துளசிதாஸரும் பரிபூரண பக்தர்கள்;

ஆழ்வார்களே யாவார்கள். தற்கால சரித்திர ஆராய்ச்சியாளர் அல்லது நெடுங் கதை எழுத்தாளர்களைப்போன்றவர்கள் அல்ல! ராமாவதாரத்தை வால்மீகியைப் போல் வெறும் ஒரு வீர புருஷனைப் பற்றிய கதையாக எழுத முடியாத நிலையிலும் காலத்திலும் கம்பர் பாடினார். ராமனை மானிடப் பிறவியில் அடைக்கக் கம்பருடைய பக்தி இடம் தராது. ஆனபடியால் கம்ப ராமாயணத்தில் அடிக்கடி, மிக ரசமான இடங்களில் ராமன் மகா விஷ்ணுவே, கடவுளே, அனைத்திலும் பரவி நிற்கும் பரம்பொருளே என்று வைத்து மனத்தை உருக்கும் முறையில் அற்புத அழகோடு பாடியிருக்கிறார்.

காலத்துக்கும் சூழ் நிலைக்கும் தக்கவாறு உண்மைக் கவிஞர்கள் பாட முடியுமே யொழிய வெறும் வற்றல் ஆராய்ச்சிகளைப் பாட்டாகப் பாட மாட்டார்கள்.

வால்மீகி ராமாயணத்துக்கும் கம்ப ராமாயணத்துக்கும் மற்றொரு பெரும் வித்தியாசம். வால்மீகி பகவான் பாடிய நூல் தமிழ் அகவற்பா முறையில் அமையப்பட்டது என்று சொல்லலாம். கம்பர் பாடியது நிருத்தியத்துக்குத் தகுந்த பாட்டு. ஆங்கிலத்தில் சொல்வோமானால், வால்மீகி ராமாயணம் கம்பீர நாதம் பொருந்திய Blank Verse என்றும் கம்பராமாயணம் ஒரு Lyric என்றும் கூறவேண்டும். கம்பருடைய பாட்டுக்கள் ஒவ்வொன்றும் எதுகையும் மோனையும் சந்தமும் கலந்து, பளிச்சுப் பளிச்சென்று ஆபரணங்களைப் பூண்ட மங்கையின் ஆடலைப் போல் மின்னித் துள்ளி நடனமாடுகிறது. தெய்வீக அவதார விஷயத்தை வைத்து உண்டாகும் உணர்ச்சியுடன் நடனச் சுவையும் கலந்து கம்பருடைய ராமாயணம் பேரழகு அடைந்து விளங்குகிறது. ஆனால் அதைத் தமிழ் மக்கள் மட்டுமே அனுபவிக்க முடியும். அதன் அழகு மற்றவர்களுக்குச் சரியாக விளங்காது. கம்ப ராமாயணத்தை அன்னிய மொழியில் பெயர்த்து எழுதுவதிலாவது தமிழில் செய்யுள் உருவத்தி லிருந்து வசன மாக்குவதிலாவது பெரும் பயன் ஒன்றுமில்லை. வசனமாக எடுத்துச் சொல்லி விளக்கி விட்டு, உடனே சரியான முறையில் பாடினால் நல்ல பயன் ஏற்படும். டி. கே. சி. மறைந்த பின் இதைச் சொல்லித்தான் என்ன பயன்?

# 1. தோட்ட விருந்து

நகரத்தின் மிகப் பிரசித்தி வாய்ந்த லட்சாதிப் பிரபுக்களில் ஸர் பிஹாரிலாலும் ஒருவர். அன்று அவர் மாளிகையில் பெரிய தோட்ட விருந்துக்கு ஏற்பாடாகியிருந்தது. சிறிது காலத்துக்கு முன்புதான் சர்க்கார் அவரது சேவைகளுக்குப் பிரதியாக அவருக்கு 'ஸர்' பட்டம் கொடுத்திருந்தது. அந்த மகிழ்ச்சியைக் கொண்டாடும் நோக்கத்துடன் தான் அவர் தம் நண்பர்களையும், உற்றார் உறவினர்களையும், தமக்கு அறிமுகமானவர்களையும் தோட்ட விருந்தில் கலந்து கொண்டு தம்மைக் கௌரவிக்குமாறு அழைப்புக்கள் அனுப்பி யிருந்தார்.

அவர் அளித்த அந்த விருந்தில் ஒரே ஒரு விசேஷம் என்னவென்றால், பழைய பத்தாம் பசலி நோக்கம் கொண்டவர்கள் அனைவரையும் ஒரு புறமாக ஒதுக்கி வைத்து விட்டு, புத்தொளி பெற்ற மறுமலர்ச்சிக்காரர்களை மட்டும் அழைத்திருந்ததைக் குறிப்பிடவேண்டும்.

தோட்டம் வெகு நேர்த்தியாக அலங்கரிக்கப் பட்டிருந்தது. ஸர் பிஹாரிலாலும் அவருடைய ஏக புத்திரியான குஸும குமாரியும் வரவேற்று உபசரிப்பதற்காக வாசற் புறத்தில் நின்று கொண்டிருந்தனர். குறித்த நேரத்தில் விருந்தினர்கள் வரத் தொடங்கி விட்டனர். பார்ஸி, ஹிந்து, முகம்மதியர், கிறிஸ்தவர் போன்ற பல இனத்தைச் சேர்ந்த ஆண் மணிகளும் பெண்மணிகளும் தோட்டம் முழுவதும் குழுமி விட்டனர். பிஹாரிலாலின் அந்தரங்கக் காரியதரிசி ரமேஷ் வரும் விருந்தினர்களை அவரவர்களுக்கு ஏற்ப ஆசனங்களில் அமரச் செய்வதும் பார்க்கத் தகுந்த பொருள்களைச் சுற்றிக் காட்டுவதுமாகப் பம்பரம் போல் சுழன்று கொண்டிருந்தான். வாலிபப் பருவத்தினன் என்றால் அந்தச் சுறுசுறுப்பு வேண்டியதுதானே?

வரும் விருந்தினர்களைக் களித்து மகிழச் செய்வதற் கென்றே ஸர் பிஹாரிலால் பற்பல விதமான மனோரஞ்சனக் காட்சிகளுக்கும் வேடிக்கைகளுக்கும் ஏற்பாடு செய்திருந்தார். ஒரு புறத்தில் கைத்திறனின் லாகவத்தைக் காட்டும் வேடிக்கை நிகழ்ச்சிகள் நடந்து கொண்டிருந்தன. இன்னொரு புறம் பழக்கிய மிருகங்களைக் கொண்டு பற்பல நூதன வேடிக்கைகள் காட்டப் பட்டுக் கொண் டிருந்தன. இன்னொரு புறம் நடனமாதர்களின் நாட்டியக் கச்சேரி நிகழ்ந்து கொண் டிருந்தது. வரும் விருந்தினர்கள் தங்கள் தங்களுக்குப் பிடித்த இடத்தில் போய் உட்காருவார்கள். ஒன்று அலுத்து விட்டால் இன்னொரு இடத்துக்கு எழுந்து செல்லுவார்கள். இப்படியாகச் சுற்றிச் சுற்றி மகிழ்ந்து கொண்டிருந்தார்கள்.

பிஹாரிலாலின் ஐசுவரியத்தைக் கண்டு உண்மையில் மட்டற்ற மகிழ்ச்சி கொள்பவர்களில் அவருடைய பெண் குஸுமாவைத் தான் கூற வேண்டும். அன்றைய விருந்துக்கு ஏற்பாடுகள் செய்ததெல்லாம் அவள்தான். அநேக ஆண்டுகளாகப் பெண்ணும் பிதாவும் சுக துக்கங்களில் ஒருவருக் கொருவர் பங்குதாரர்களாகி யிருந்தார்கள். காரணம், குஸுமாவின் தாயார் இறந்த பின்னர் பிஹாரிலால் வேறு விவாகம் செய்து கொள்ளவில்லை.

பணக்காரன் மேலெழுந்தவாரியாகப் பார்த்தால் சதா சுகமாகவே இருப்பவனாகத் தோன்றுகிறான். ஆனால் அவன் வாழ்க்கையிலும் ஒன்றில்லா விட்டால் ஒரு குறையும், கவலையும் இருக்கத்தான் செய்கின்றன. அப்படியே எவ்விதக் குறையும் கவலையும் இல்லாவிட்டாலும் பணத்தையும் சொத்தையும் நிர்வகிப்பதில் எத்தனையோ சிக்கல்களும் சிரமங்களும் ஏற்பட்டு விடுகின்றன.

தந்தைக்கு எந்த ஏற்பாடாவது பிடிக்காமல் போய் விடக் கூடாதே என்பதற்காகக் குஸுமா ஒவ்வொரு விஷயத்தையும் கண்ணும் கருத்துமாகக் கவனித்து வந்தாள்.



பிஹாரிலாலும் தமது அன்பு முழுவதை யும் குஸுமாவின் மீதே கொட்டி வந்தார்.

தான் செய்த ஏற்பாடுகள் அனைத்தையும் பார்த்து அப்பா கட்டாயம் சந்தோஷப் படு வார் என்று குஸுமா எண்ணினாள். அவள் எண்ணம் வீண்போகவில்லை. அவள் நினைத்த படியே பிஹாரிலால் தமது மகிழ்ச்சியை அவளெதிரிலேயே தெரிவித்துக் கொண்டார். ஆயினும் குஸுமாவுக்கு அவர் ஏதோ கவலை தோய்ந்தவராகக் காணப்பட்டார். அவள் தன் மனத்தில் தோன்றியதை மனத்திலேயே வைத்துக் கொள்ளாமல் கேட்டு விட்டாள்.

"அண்ணா!"

ஹிந்து சமூகத்தில் தகப்பனாரை 'அண்ணா' என்று கூப்பிடும் வழக்கம் இன்னும் பழக்கத் தில் இருந்துதான் வருகிறது.

"அண்ணா! நீங்கள் வாய்விட்டுச் சொன்னா லும் சொல்லாவிட்டாலும், இன்றைய என் ஏற்பாடுகள் உங்களுக்குப் பிடிக்கவில்லை என்றுதான் தோன்றுகிறது!" என்றாள்.

பிஹாரிலால் இலேசாகச் சிரித்த வண் ணம், "அப்படியெல்லாம் ஒன்றும் இல்லை, அம்மா! உன் ஏற்பாடுகளில் ஒருவிதக் குறை வும் காணப்படவில்லையே!" என்றார்.

"ஆனால் உங்கள் முகத்தில் மகிழ்ச்சிக் குறியையே காணோமே!" என்று சடக் கென்று கேட்டு விட்டாள் குஸுமா. அப் புறம்தான் பிஹாரிலால் தம்மைச் சமாளித் துக் கொண்டார். அவர் முகத்தில் தாண்டவ மாடிக் கொண்டிருந்த கலவரமும் வருத்தமும் குஸுமாவின் கண்களிலிருந்து எப்படித் தப்ப முடியும்?

பிஹாரிலால் அந்தக் கலவரத்தையும் கவலையையும் மறைத்துக் கொண்டு, "என் முக்கியமான நண்பர்களில் இருவர் இன்னும் வரவில்லை. அவர்களைப் பற்றி யோசித்துக் கொண்டிருந்தேன். அதனால்தான் உனக்கு அப்படித் தோன்றி யிருக்கிறது. நான் எங்கோ போய்க் கொண்டிருந்த பொழுது அவர்களை அழைத்தேன். அதனால்தான் அவர்கள் வரவில்லையோ என்று தோன்று கிறது. அவர்களை அழைத்து வர யாரை யாவது அனுப்பட்டுமா, வேண்டாமா?" என்று கேட்டார்.

"ரமேஷை அனுப்பி வையுங்களேன்!"

"கூடாது! சண்டைக்கு வந்து விடுவான்!".

"ரமேஷா சண்டைக்கு வந்து விடுவார்?" குஸுமாவுக்கு ஆச்சரியமாயிருந்தது. "அப் படி எந்தச் சிநேகிதர்கள் வராமல் தங்கி விட்டார்கள்? எல்லோரும் தான் வந்து விட் டார்கள் போல் தோன்றுகிறதே!" என்றாள்.

பிஹாரிலால் கொஞ்ச தூரம் கண்களை ஓட விட்டுப் பார்த்தார். பிறகு சிரித்துக் கொண்டே, "உனக்கு இப்பொழுது தெரிந்து விடும். அவர்களும் வந்து விட்டாற் போல் தோன்றுகிறது!" என்றார்.

வாசல் அருகில் வந்து ஒரு மோட்டார் நின்றது. அதிலிருந்து இரண்டு பேர் இறங் கினார்கள். அவர்களில் ஒருவன் எல்லோருக் கும் அறிமுகமான தேசபக்தன். வக்கீல் சுக பால் என்பவன். மற்றவன் தேசத்தின் நலத் தில் நாட்டம் கொண்டவன். 'கர்ஜனை' என் னும் பத்திரிகைக்கு ஆசிரியன். சாந்திப் பிரியன் என்பது அவன் பெயர்.

வக்கீலாக ஆகாமல் நாட்டில் யாரும் பேரும் புகழும் அடைய முடியாது. மேன்மை யுற்று விளங்கும் நாடுகளின் கடிவாளங்கள் அனைத்தும் வக்கீல்களின் கையில்தான் இருக் கின்றன. வக்கீல் சுகபால் எத்தனையோ சங்கங்களிலும் கூட்டங்களிலும் பங்கு எடுத் துக் கொண்டவன். பலத்த கரகோஷங்க ளின்றி அவன் ஒரு பொதுக் கூட்டத்தில் மேடை ஏறி நின்றான் என்பது கிடையாது. வானைப் பிளக்கும் பலத்த கரகோஷமின்றி அவன் மேடையில் உட்கார்ந்தான் என்பதும் கிடையாது. பிரசங்கத்தின் நடு நடுவே காதைப் பிளக்கும் கரகோஷங்கள் எத்தனை எத்தனை எழுந்தன என்பதற்கும் ஒரு கணக்கு வழக்குக் கிடையாது. அவன் பேசும் பொழு தெல்லாம், தன்னை ஒரு மிகப் பெரிய தலைவ னாகவே தான் எண்ணுவான். அவன் தனது கைகளைச் சுழற்றிச் சுழற்றிப் பேசுவதே ஒரு அலாதி அழகாயிருக்கும். சிம்மத்தைப் போல் அவன் தனது நீண்ட தலைமயிரைச் சிலிர்த்து விட்டுக் கொள்வான். நாற்புறமும் சுழன்று பார்த்து அவன் தனது கூரிய சொல் லம்புகளை மழையாக வர்ஷிப்பான். சர்க்கார் அதிகாரிகளும் பட்டம் பதவி பெற்றவர் களும் அவனுடைய கூரியசொல் அம்புகளுக்கு இலக்காகாமல் இருந்ததில்லை. இந்தப் போலீஸ் புலிகள்...உண்மையில் புலிகளா?— இப்படி அவன் கேட்கும் பொழுது சபையில் ஏற்படும் ஆரவாரம் அடங்கக் குறைந்தது அரை நாழிகையாவது ஆகும்.

பிஹாரிலால் 'ஸர்' ஆனபிறகு அவர் செய்த கோர பாவ கிருத்தியங்களையும், அவ ருடைய ஏழேழு தலைமுறைகளையும் அம்பலத் துக்கு இழுத்துக் குற்றங் குறைகளை அக்கு வேறு, ஆணி வேறாக அலசிச் சுகபால் எத் தனையோ கூட்டங்களில் காரசாரமான சொற்பொழிவாற்றி, அவரைப் பற்றிய தன் அபிப்பிராயங்களை ஆணித்தரமாக எடுத் துரைத்திருந்தான். சமீபத்தில் தான் அவனு டைய குடும்பம் குளவிக் கூடாக உடைந் திருந்தது. அவன் சொல்லில் சூடும் கடுமை யும் அத்தனை தூரம் ஏறியிருந்ததற்கு அதுவும் ஒரு காரணமாக இருக்குமோ, என்னவோ? துயரப்பட்டவனிடம் கடுகடுப்பும் சிடுசிடுப் பும் அதிகரிப்பது இயல்பே அல்லவா?

'கர்ஜனை' பத்திரிகை தனது அச்சமற்ற ஆணித்தரமான அபிப்பிராயங்கள் காரண மாக நாடு எங்கும் மிகப் பிரசித்தி பெற்றிருந் தது. யாருக்கும் மதிப்பும் மரியாதையும் வைக்காமல் இருப்பதுவே, அந்தப் பத்திரி கையின் முக்கிய குறிக்கோளாக இருந்தது. சிறியவன், பெரியவன் என்ற தாரதம்மியம் பார்க்காமல் தனக்குச் சரியென்று தோன்றி யதைத் தைரியமாக எழுதுவதே ஒரு விசே

ஷம்தானே? அங்கப் பத்திரிகை ஒன்றே உல கத்தில் படிக்கப்படுமானால், உலகத்தில் யாராவது கெட்டவர்கள் என்று இருந்தால் அவர்கள் ராஜாக்களும், மகா ராஜாக்களும், அதிகாரிகளும், பட்டம் பதவி பெற்றவர் களும்தான் என்றும் படிக்கும் வாசக நேயர் களுக்குப் பரிபூரணமான நம்பிக்கை ஏற்பட் டிருக்கும். உண்மையான சூர வீரனைப்போல் எத்தனைதான் பெரிய மனுஷ்யனாக இருந் தாலும், அவனைப் பற்றிய மூக ஸ்துதியான விஷயங்களையோ தோத்திரங்களையோ தன் பத்திரிகையில் வெளியிட இடங் கொடுப்ப தில்லை. பத்திரிகையின் இத்தனை பெருமைக் கும் காரணம் அதன் ஆசிரியனான சாந்திப் பிரியனும் குத்தலாக எழுதும் அவனது பேனா முனையும்தான். சுதந்திர நோக்கம் படைத்த, அச்சம் தவிர்த்த, கள்ளங் கபட மற்ற வாலிபனான சாந்திப் பிரியனின் பேனாவின் வன்மையை என்ன வென்று புகழ்வது? அவனுடைய பேனாதான் அந் தப் பத்திரிகையின் அத்தனை புகழுக்கும் காரணம் என்ற விஷயம் யாருக்கும் தெரி யாத விஷயம் அல்ல. பிஹாரிலாலுக்குக் கிடைத்த 'ஸர்' பட்டத்தின் காரணமாகச் சாந்திப் பிரியனின் பேனா முனைக்கு அவர் இலக்காக நேரிட்டது. கட்டுரைகளுக்குக் காரசாரமான தலைப்புக் கொடுக்கும் சாந்திப் பிரியனின் மேதையை வாசகர்களால் எப்படியும் பாராட்டாமல் இருக்க முடி வதே இல்லை.

"கொக்கின் தலையில் வெண்ணெய்!"

"விளக்குமாற்றுக் கட்டைக்குப் பட்டுக் குஞ்சலம்!"

"பணம் தரும் பட்டம்!"

"விரலும் வீக்கமும்!"

"காற்றில் பறக்கும் சர்க்காரின் 'ஸர்' பட்டம்!"

"'ஸர்' பட்டம் சர்க்காரின் தம்பட்டம்!"

இதுபோன்ற உள்ளத்தையும் உணர்ச்சியை யும் தூண்டிவிடும் தலைப்புகள் கொடுத்து அந்தப் பத்திரிகையில் ஸர் பிஹாரிலாலைப் பற்றிப் பல கட்டுரைகள் வெளியாயின. பட்டம் பெறாத பலரும் பிஹாரிலாலைப் பற்றிப் பலபடியாகக் கேலி செய்தார்கள். ஆனால் அவர்கள் எல்லாம் விவாகம் ஆகாத வர்கள். அப்படி யிருக்கும் பொழுது சுகபாலும் சாந்திப் பிரியனும் மட்டும் விவா கம் ஆனவர்களாக இருக்க முடியுமா?

இவ்வளவு காரசாரமாக எழுதியும் பேசி யும் வந்த பொழுதிலும் அவ்விருவரும் பட்டம் பெற்றவர்கள் அனுப்பும் அழைப்பிதழ்களை மட்டும் அவமதித்ததில்லை. அதுவும் ஸர் பிஹாரிலால் விசேஷ அழைப்பிதழ் அனுப்பி யிருக்கிறார் என்றால் அவமதிக்க முடியுமா? அல்லது வராமல்தான் இருக்க முடியுமா?

மோட்டாரிலிருந்து இறங்கியதும் ஸர் பிஹாரிலால் இருவரையும் வெகு மரியாதை யாக வரவேற்றுத் தோட்டத்துக்கு அழைத் துச் சென்றார். பிறகு அவர்கள் இருவரை யும் விசேஷமாகக் கவனித்துக் கொள்ளும்படி தம் பெண் குஸுமாவுக்குக் கட்டளையிட்டு விட்டு மற்றவர்களைக் கவனிக்க நகர்ந்தார்.

சுகபாலையும் சாந்திப் பிரியனையும் குஸுமா தோட்டத்தில் நடக்கும் கேளிக்கை களையும் வேடிக்கைகளையும் காட்ட அழைத் துச் சென்றாள். எல்லாவற்றையும் சுற்றிக் காட்டுவதற்கும் விருந்து ஆரம்பமாவதற்கும் சரியாக இருந்தது. விருந்து மேஜையிலும் அவள் அவ்விருவருடனும் உட்கார்ந்தாள். பொது மக்களிடையே சுகபாலும் சாந்திப் பிரியனும் தங்கள் தேசத்தொண்டின் காரண மாகத் தெய்வமாகப் பூஜிக்கப் பட்டு வந்தார் கள். அவர்கள் எதிலாவது கலந்து கொள்ளு கிறார்கள் என்றால், அதை எல்லோரும் பெருமைக்குகந்த விஷயமாகக் கருதினார்கள். வெளியுலகத்து நடவடிக்கைகளைப் பற்றி நன்கு அறிந்திருந்த குஸுமாவுக்கும், மரியா தைக்கும் மதிப்புக்கும் உகந்த விருந்தினர் களைப் பற்றி மதிப்பான அபிப்பிராயமே இருந்துவந்தது. இத்தனை பெரிய மனிதர்கள் நம்மிடம் மட்டும் ஏன் இவ்வளவு கடுமை யாக நடந்து கொள்ளுகிறார்கள் என்ற ஒரு விஷயம்தான் அவள் மனத்துக்குப் பெருங் கவலையை அளித்து வந்தது.

பிஹாரிலாலின் பெண் என்பதன் காரண மாகக் குஸுமாவை நாகரிக உலகம் நன்கு அறிந்திருந்தது. அது மட்டும் அல்ல; இந்தக்

காலத்துப் படித்துப் பட்டம் பெற்றுத் தான் தோன்றித் தனமாக நடந்து கொள்ளும் பெண்களைப் போல் அல்லாமல் நற்குணங்கள் நிறைந்த யுவதியாக இருக்கிறாள் என்ற காரணமாகவும் அவள் நகரம் முழுவதும் பிரசித்தி பெற்றிருந்தாள். சுகபாலும் சாந்திப் பிரியனும்கூட அவளுடைய கியாதியைப் பற்றிக் கேள்விப் பட்டிருந்தார்கள். அது மட்டும் அல்ல; அதற்கு முன்னால்கூட அவளை அநேகக் தடவை பார்க்கவும் பார்த்திருந்தார்கள். இருபது இருபத்தைந்து வயதுள்ள-ஏன்? - அதைக் காட்டிலும் அதிகமான வயதுள்ள ஆண்களிடத்திலும் கூடக் கியாதியடைந்த பெண்களைப் பற்றித் தெரிந்து கொள்ள வேண்டும் என்ற அதிசய ஆவல் கட்டுக்கடங்காமல் இருந்து வருகிறது. அன்றோ அவர்கள் இருவருக்கும் குஸுமாவை நேரில் அறிமுகம் செய்து கொள்ளும்படியான கட்டமே ஏற்பட்டு விட்டது. அப்படியிருக்கும் பொழுது அவர்கள் ஆவலைப் பற்றிக் கேட்பானேன்?

பெண்கள் இருக்கும் பொழுது ஆண்கள் காட்டும் ஆதரத்துக்கும் சஞ்சலத்துக்கும் ஒரு எல்லை கிடையாது. இது ஆண்களுக்கு ஏற்பட்ட இயல்பான சுபாவமே ஆகும். வக்கீலும் ஆசிரியனும் குஸுமாவைக் கண்டதும் 'துரு துரு' வென்று சஞ்சலமே உருவாகி விட்டார்கள். 'தங்கள் சஞ்சலத்தையும் ஆதரத்தையும் காட்டிக் கொள்வதில் யார் மூக்கி?' என்ற போட்டியே அவர்களிடையில் ஏற்பட்டு விட்டது. அந்த ஆவலும் சஞ்சலமும் கடைசியில் பொழுது போக்குப் பேச்சாக உருத் தரிக்கத் தொடங்கியது.

"இந்த வக்கீல் இருக்கிறாரே, இவருடைய குணம் எப்படிப் பட்டது என்று உங்களுக்குத் தெரியுமோ?" என்று சாந்திப் பிரியன் குஸுமாவைப் பார்த்துக் கேட்டான்.

"நல்ல குணமாகத்தான் இருக்க வேண்டும்!"-வேறு பதில் சொல்லச் சட்டென்று தோன்றாததால் குஸுமா பட்டும் படாமலும் மேற்கூறியவாறு சொல்லி வைத்தாள்.

"உண்மையான வார்த்தை! நல்ல இசைவாணரைப் போலவே இவரும் நல்லவர் தான். இசைவாணருக்கு அண்டிப் பிழைக்கும் அரசனைப் பற்றி நல்லது சொல்ல வருமே ஒழியக் கெட்டது சொல்ல வராது. அதே போல இவரிடமும் ஒரு நல்ல குணம் இருக்கிறது. அது என்ன, தெரியுமா? இவரிடம் ரூபாயைத் தவிர மற்றப் பொருள்கள் எதுவும் தங்குவதில்லை. பணத்தைத் தவிர மற்றவையெல்லாம் வடி கட்டி தாமாகவே வெளியே வந்து விடுகின்றன!"-சாந்திப் பிரியன் தன் சஞ்சலம் தோய்ந்த கண்களைக் கொட்டிக் கொட்டி விழித்துக் கொண்டு கேலி செய்யும் தோரணையில் சொன்னான்.

"வாஸ்தவம். நான் ஒப்புக் கொள்கிறேன்!" — ஒரு சிகரெட்டை எடுத்துப் புறங் கையில் குத்தியவாறே சுகபால் தொடர்ந்தான். "ஆனால் நம் ஆசிரியரிடத்தில் உள்ள மிக மிக விசேஷமான ஒரு குணத்தைப் பற்றியும் தங்களுக்கு ஏதாவது தெரிந்திருக்க வேண்டுமே?"

"அது என்னவோ?" என்று வெகு சகஜமாகக் கேட்டாள் குஸுமா.

"நம் ஆசிரியருக்குக் காது கொஞ்சம் நீளம். உலகத்தில் எந்தப் பகுதியில் எந்த மாதிரிக் குரல் கேட்டாலும் அவருக்கு உடனே தெரிந்து விடுகிறது!" என்றான் சுகபால் ஏகத்தாளமாக.

சாந்திப் பிரியனின் முகத்தில் கொஞ்ச நஞ்சம் இருந்த சிரிப்பும் மறைந்து விட்டது. அது மறைந்தது அவனுக்கே ஆபத்தாக முடிந்தது. சாந்திப்பிரியன் மறுமொழி ஒன்றும் சொல்லாமற் போகவே, சுகபாலுக்கு இன்னும் கொஞ்சம் துணிவு கொடுத்தது. "அது மட்டுமா? அவருடைய தொண்டையில் ஒரு அழகான இயந்திரம் இருக்கிறது. அது குரலை உயர்த்திக் காட்டுகிறது. அது குரல் கொடுத்தால் ஆயிரக் கணக்கான மக்கள் கேட்க வேண்டாம் என்று நினைத்தாலும் கூடக் கேட்டுத்தான் ஆக வேண்டும்!" என்றான்.

அதைச் சொன்னதோடு நிறுத்திக் கொள்ளாமல் கை தட்டிக் கல கல வென்று சிரிக்கவும் ஆரம்பித்து விட்டான். குஸுமா ஆதரித்து ஆமோதிப்பாள் என்று எண்ணி அவள் முகத்தைப் பார்த்தான். ஆனால் குஸுமா அதில் அதிகக் கவனம் செலுத்தவில்லை.

கழுதை என்று சொல்லாமல் ஒருவன் சொல்லிக் காட்டினால் ஒருவனுக்கு எப்படி இருக்கும்? அடிபட்ட நாகம் போல் சாந்திப் பிரியன் சீறி விழுந்தான். "எங்கள் இருவரிலும் குரைக்கும் வேலையை யார் செய்கிறார்கள் என்பது நான் சொல்லித் தெரிய வேண்டிய விஷயம் இல்லை. அது எல்லோருக்குமே தெரிந்த பகிரங்க ரகசியம்!" என்று தன் ஆத்திரத்தைக் கொட்டித் தீர்த்துக் கொண்டான்.

குஸுமா அதையும் காதில் வாங்கிக் கொள்ளாதவள் போலவே நடித்தாள். கெட்டிக்காரி யல்லவா? பிறகு மெதுவாக அங்கிருந்து நழுவி 'கர்பா' நடனத்துக்கான ஏற்பாடுகளைக் கவனிக்கச் சென்றுவிட்டாள்.

படித்த பெண்கள் பலர் 'கர்பா' நடனம் ஆடுவதான திட்டமும் நிகழ்ச்சி நிரலில் சேர்க்கப் பட்டிருந்தது. விருந்தினர்கள் அதைப் பார்ப்பதற்காக அந்தப் பக்கம் சென்றனர். கண் இமைக்கும் நேரத்தில் 'கர்பா' நடனம் நடக்க வேண்டிய இடத்தில் ஒரு பெருங் கூட்டமே கூடி விட்டது.

பழைய முறையிலும் புதிய முறையிலும் பாடல்கள் ஆரம்பமாயின. விதம் விதமான பாட்டுக்கள். அந்த அந்தப் பாட்டுக்கேற்ற தாளக் கட்டுகள். அவற்றுக் கேற்றவாறு உடலை வளைத்து, அங்க நெளிவுகளைக் காட்டிப் பாடகர்கள் வெகு சுகமாகப் பாடலாயினர். விதவிதமான ஆடைகளும் ஆபரணங்களும் அணிந்து வண்ணத்திப் பூச்சிகளெனப்



## நீங்கள் இன்று உங்கள் பற்களை

# மக்ளீன்

## செய்தீர்களா?



**ஆம், அதன் இரகசியம் இதுதான்...**

பற்களைத் தவறாமல் சுத்தம் செய்து வருவதால் அவை நெடு நாளைக்கு ஆரோக்யமாக இருக்கின்றன என்பதைத் தெளிவாக்கி விடுவோம். பிரதி தினமும், இருவேளையும் மக்ளீன்ஸ் பெராக்ஸைட் பற்பசை உபயோகிப்பதால், அதிக வெண்மையான பற்களும், உறுதியான ஈறுகளும் நறுமணமுள்ள சுவாசமும் நிச்சயமாக உண்டாகின்றன. இவ்வித்தியாசத்தை நீங்களே காணலாம். மக்ளீன்ஸிலுள்ள ஒரு ப்ரத்யேகமான பொருள் பற்களின் மேல் படிந்துள்ள மங்கலான பூச்சை மாற்றி பற்களின் மேல் இயற்கையாக ஒளிரும் வெண்மையை வெளிக்கொணர்கிறது.

"... என்னைப் போலவே தங்களது பற்களைப் பற்றிப் பெருமைப்படுபவர்களுக்கு மக்ளீன்ஸ் பற்பசையையே சிபார்சு செய்கிறேன்"




க்ளோரோபில் சேர்ந்தும் கிடைக்கும்.

MTY-38-TAM.

பறந்து வந்த பெண்கள் கின்னரப் பெண்களைப் போலக் குரல் இனிமையைக் கொட்டி ஜடமாக நின்ற உலகத்தைத் தட்டி எழுப்பிக் கலகலக்கச் செய்து விட்டனர். கலையழகு நிரம்பி ஜோடிக்கப் பட்டிருந்த தீப வரிசைகளிலிருந்து எழுந்த ஒளி காட்சி யனைத்தையும் இந்திர லோகமோ சந்திர லோகமோ என்று மயங்கும்படி எழிற் காட்சியாகச் சிருஷ்டித்து விட்டது.

குஸுமா — அத்தனை ஏற்பாடுகளுக்கும் காரணமான குஸுமா,-களைத்து விட்டாள். எனவே, 'கர்பா' நடனம் தொடங்கி நடந்து கொண் டிருந்தபொழுதிலும் சிறிது நேரம் இளைப்பாறலாம் என்ற உத்தேசத்துடன் பக்கத்திலிருந்த கொடி வீடு ஒன்றில் நுழைந்தாள். அங்கே போட்டிருந்த பெஞ்சு ஒன்றில் கண்களை மூடிக்கொண்டு உட்கார்ந்தாள்.

சிறிது நேரத்துக் கெல்லாம் பெஞ்சியின் இன்னொரு புறத்திலும் யாரோ உட்கார்ந்திருப்பதாகத் தோன்றவே, கண்களை விழித்துப் பார்த்தாள். அசதியின் காரணமாக முன்பே கவனிக்காத அவளுக்கு, உட்கார்ந்திருப்பவன் தனக்கு முன்பாகவே வந்து உட்கார்ந்திருப்பானா அல்லது தனக்குப் பிந்தித்தான் வந்து உட்கார்ந்திருப்பானா என்பது விளங்கவில்லை. அவள் அந்தப்புறம் பார்க்காமல் கண்களைத் திருப்பிக் கொண்டாள். இருந்தாலும் மங்கிய ஒளியில் சிகரெட் புகை தெரிந்தது. அதற்குள்ளாக வக்கீல் சுகபாவின் குரல், "ஓகோ! நீங்களா, குஸுமா? மிகவும் களைத்து விட்டீர்கள் போலிருக்கிறதே!" என்று கேட்டு அவளை மறுபடியும் திரும்பிப் பார்க்கும்படி செய்தது.

இந்தக் கேள்விக்குப் பதில் சொல்லுவதா, வேண்டாமா என்று குஸுமாவுக்கு ஒன்றும் விளங்கவில்லை. ஆனால் சுகபாலும் பதில் கிடைக்க வேண்டும் என்றோ கிடைக்க வேண்டாம் என்றோ சிறிதும் கவலைப்பட்டவனாகத் தெரியவில்லை.

"ஆமாம். உங்களுக்கு இன்னொரு புறத்தில் ஒருத்தன் தனியாக நின்று கொண்டிருந்தானே, அவன் உங்கள் ஆசிரியனா?" என்று கேட்டான் சுகபால். 'கர்பா' நடனம் நடந்து கொண்டிருந்த இடத்தில் விருந்தாளிகளின் வரிசைக்குப் பின்னால் ரமேஷ் தனியாக நின்றுகொண் டிருந்தான். அவனைப் பற்றித் தெரிந்துகொள்ள வேண்டும் என்ற நோக்கத்தில்தான் சுகபால் அவளிடம் அந்தக் கேள்வியைக் கேட்டான்.

"இல்லை, அவர் என் தகப்பனாரிடம் உத்தியோகம் பார்க்கிறார்!" என்று பதில் அளித்தாள் குஸுமா.

"அப்படியா? அவன் உங்கள் வேலைக்காரனா? உங்களிடம் அவன் எத்தனை வருஷங்களாக வேலை செய்கிறானோ?"

"இரண்டு மூன்று வருஷங்களாக இருக்கிறார்!" என்றாள் குஸுமா.

ஒருவருடைய வேலைக்காரனைப் பற்றி இம்மாதிரி யெல்லாம் ஒருவன் கேட்பது குஸுமாவுக்கு அநாகரிகமான கேள்வியாகப் பட்டது. எனவே, இவர் ஏன் இப்படி அற்பத்தனமாகப் பேசிக் கொண்டிருக்கிறார் என்ற கேள்வி அவள் உள்ளத்தில் பிறந்தது. ஏனெனில் தலைவர்களிடத்தில் கடுகத்தனை குறையைப் பார்ப்பதென்றாலும் யாருக்குமே பிடிப்பதில்லை அல்லவா?

சுகபால் சிறிதும் விருப்ப மின்றியே எழுந்து விருந்தினர்களின் கும்பலில் போய்க் கலந்து கொண்டான். (தொடரும்)

---

## கற்பகத் தரு மறைந்தது!

மே மாதம் எட்டாந் தேதி தமிழகம் ஒரு பெரிய கொடையாளரை இழந்தது. கொடையைப் பிறவிக் குணமாகப் பெற்றிருந்த செல்வச் சீமாட்டியை இழந்தது. கொழுமம் ஸ்ரீமதி காமகிரி யம்மாள் இவ்வுலகை விட்டு மறைந்தார். அவருடைய கொடைத் திறனுக்குச் சான்றாகப் பல கல்விச் சாலைகளும் பொதுநல ஸ்தாபனங்களும் நின்று நிலவுகின்றன. அவை என்றும் அம்மையாரின் ஈகைத் திறனை எடுத்தியம்பிக் கொண்டே யிருக்கும். அவற்றில் முக்கியமானது சென்னை விவேகானந்தா கல்லூரியாகும்.

1945-ம் ஆண்டில் சென்னை விவேகானந்தா கல்லூரி நிர்வாகத்தினருக்குக் கல்லூரியை ஆரம்பிக்க ஐந்து லட்ச ரூபாய் வேண்டி யிருந்தது. இந்தத் தொகையை யாரிடம் கேட்பது என்று திகைத்துத் திணறிக் கொண்டிருந்தனர். அந்த வேளை ஸ்ரீமதி காமகிரியம்மாள் ஒரு லட்சத்தி இருபத்தையாயிரம் ரூபாய் நன்கொடையாக வழங்கி மாபெரும் உதவி புரிந்தார். அதற்குப் பிறகு இரண்டாவது தவணையாக ரூ 25,000 வழங்கி யிருக்கிறார்.

தமிழ் நாட்டில் ஸ்ரீமதி காமகிரியம்மையாரின் தயையையும் கொடையையும் பெற்ற ஸ்தாபனங்கள் பல. பழனியில் ஒரு தர்ம சத்திரம், உடுமலைப்பேட்டையில் ஒரு பிரசவ ஆஸ்பத்திரி, சொந்த ஊரில் ஓர் உயர்நிலைப் பள்ளி, திருச்சியில் மாணவர் விடுதி—இப்படிப் பல பரோபகார ஸ்தாபனங்களை ஏற்படுத்தி அவைகளுக்கு ஏராளமாக நன்கொடைகள் வழங்கி யிருக்கிறார். திருச்சி தேசியக் கல்லூரிக்கு வழங்கியுள்ள நன்கொடைகள் பல.

இப்படிப்பட்ட வள்ளல் தன்மையைப் பிறவிக் குணமாகப் பெற்ற பெருமாட்டி ஸ்ரீமதி காமகிரி யம்மையார் மே மாதம் 8-ட இறைவனடி சேர்ந்து விட்டார்.

அம்மையாரின் இந்தப் பெரும் தர்ம கைங்கரியங்களில் எல்லாம் அவருக்குப் பக்கத்திலிருந்து உதவிய அவருடைய புதல்வர் ஸ்ரீமான் கணபதி சுப்பிரமணியத்துக்கும் மற்றுமுள்ள உற்றார் உறவினருக்கும் நமது ஆழ்ந்த அனுதாபங்களைத் தெரிவித்துக் கொள்ளுகிறோம்.

வேர்க்குருவைப்போக்க
கார்டில்முறையை அனுசரிக்கவும்

# கார்டில்
# ப்ரிக்லீ ஹீட்
# பவுடர்




கார்டில் சருமத்தை ஹானியற்ற முறையில் மென்மை படுத்துகிறது.

வேனிற் காலத்திய உபாதைகளை குணப் படுத்தும் பொருட்டு விசேஷமான ரசாயன முறைகளினால் தயாரிக் கப் பட்டது. கோடை காலத்திய எரிச்சல் அரிப்பு முதலியவைகளை உடனடியாகக் குணப் படுத்தும்.

வருகிறது கோடைகாலம்

## " கார்டில் "

உபயோகியுங்கள்

---



# அறியாத அன்பு

அநுத்தமா

சிவகாமு அம்மாள் ஜன்னல் பக்கத்திலிருந்து திரும்பி அறையின் விளக்கைப் பொருத்தினாள். பிறகு தன் மகன் ஜயராமனின் படுக்கையருகில் சென்று அவனைத் தட்டி எழுப்பினாள்.

"ஜயராமா, ஜயராமா, எழுந்திரு!" என்ற அன்னையின் குரலிலிருந்த அவசரத்தைக் கண்டு ஆச்சரியமடைந்தவனாய் ஜயராமன் சட்டென்று எழுந்திருந்து உட்கார்ந்து கொண்டான்.

"என்ன அம்மா! எங்காவது ஏதேனும் ஓசை கேட்கிறதா! அல்லது உனக்கு ஏதாவது..." என்று அவன் பரபரப்புடன் எழுந்து கேட்டான்.

"அதெல்லாம் ஒன்றுமில்லை, அப்பா. பக்கத்து வீட்டில் ஒரு நாழிகையாக ஏதோ கலவரமாக இருக்கிறது. யாருக்கு என்னவோ தெரியவில்லை. அந்தக் கிழவர் இப்பொழுதுதான் வெளியே கிளம்பினார். யாருக்காவது ஏதாவது உடம்பு சரியில்லையோ என்னவோ தெரியவில்லை. அந்த அம்மாள் வாய்விட்டு அலறிவிட்டாள்!" என்றாள் சிவகாமு அம்மாள்.

ஜயராமன் ஜன்னலருகில் வந்து தானும் பார்த்தான். அடுத்த வீட்டுக் கூடத்தில் அவர்கள் வீட்டுச் சின்னப் பெண்ணும் தாயாரும் அழுத கண்ணும் பிசைந்த கையுமாக அலைவது தெரிந்தது.

"அவர்கள் மூத்த பெண்ணுக்குத்தான் உடம்புக்கு ஏதோ வந்துவிட்டது போல இருக்கிறது. மற்ற மூன்று பேர்களும் இருக்கிறார்களே!" என்று கூறிவிட்டு அவன் திரும்புவதற்குள் பக்கத்து வீட்டுத் தெரு விளக்கு எரிய ஆரம்பித்தது. அந்த வெளிச்சத்தில் அந்த வீட்டு எஜமானனாகிய பெரியவர் படி இறங்குவது தெரிந்தது.

"அவர் அப்பொழுதே கிளம்பி விட்டார் என்றாயே, அம்மா!" என்று கேட்டான் ஜயராமன்.

"அப்படித்தான் நினைத்தேன். ஜயராமா, நீ சட்டையைப் போட்டுக்கொண்டு போய் விசாரி. என்ன ஆபத்தோ என்னவோ! அவரைக் கூப்பிடாதே, அபசகுனமாக நினைக்கப் போகிறார்கள்" என்றாள் சிவகாமு அம்மாள்.

ஜயராமன் பதில் பேசாமல், சட்டையை மாட்டிக் கொண்டு டார்ச் விளக்கையும் சைக்கிளையும் எடுத்துக்கொண்டு வெளிக் கிளம்பினான். பக்கத்து வீட்டுக்காரர், குமாரஸ்வாமி மெதுவாக நடந்து சென்று கொண்டிருந்தார்.

அந்த நிசி வேளையில் அவரது கூனிய உடலும், தலைக் கட்டும், கோல் ஊன்றிய கையும், அவன் உள்ளத்தை உருக்கின. அவன் சைக்கிளை ஒரு மிதி மிதித்து அந்த மனுஷன் அருகில் போய் இறங்கினான். அவர் நின்றுவிட்டுத் திரும்பினார்.

"வீட்டில் யாருக்காவது உடல் அசௌகரியமா!" என்று கேட்டான் ஜயராமன்.

குமாரஸ்வாமி அவனைப் பார்த்தார். அவர் கண்கள் கலங்கி, பார்க்கப் பரிதாபமாக இருந்தன

"டாக்டர் வீட்டுக்குப் போகிறீர்களா!" என்று மீண்டும் ஜயராமனே பேசினான்.

"ஆமாம். என் பெரிய பெண். அவள்......". என்று கூறுவதற்குள் அவரது நெஞ்சை அடைத்துக் கொண்டது.

"நீங்கள் வீட்டுக்குப் போங்கள். என் தாயார் அகஸ்மாத்தாகத் தூக்கம் விழித்தபோது பார்த்திருக்கிறாள். என்னை உடனே உங்கள் பின்னால் அனுப்பினாள். உங்கள் டாக்டர் நாராயணன் தானே! நான் சைக்கிளில் போய் அழைத்து வருகிறேன்" என்றான் ஜயராமன்.

அவர் வேண்டாம் என்று தலையை அசைத்தார்.

ஜயராமன் அவரை வற்புறுத்தித் தன் சைக்கிளின் பின் பக்கத்தில் மெள்ள உட்கார வைத்துக் கொண்டு டாக்டர் வீடு தேடிக் கிளம்பினான்.

டாக்டர் வந்து நோயாளியைப் பார்த்தார். இதய சம்பந்தமான ஒரு தாக்கு ஏற்பட்டு விட்டது என்றுரைத்து, சில மருந்துகளை எழுதிக்கொடுத்து விட்டு, ஊசிகளும் போட்டு விட்டுப் போனார்.

ஜயராமனும் அவன் தாயாரும் தங்கள் வீட்டைப் பூட்டி விட்டுப் பக்கத்து வீட்டிலேயே இருந்தனர், அன்று முழுவதும்.

"இன்றைக்குச் சோதனை பாருங்கள், வேலைக்காரர்கள் ஒருவர் கூட வீட்டில் இல்லை. ஒவ்வொரு காரணத்தோடு ஒவ்வொருவரும் போய் விட்டனர். டெலிபோன் கெட்டு விட்டது என்று அதைப் பிடுங்கி வைத்திருக்கிறது" என்று அடுத்த வீட்டு அலமேலு அங்கலாய்த்துக் கொண்டிருந்தாள்.

அவர்கள் மூத்த பெண்ணுக்குக் குடலில் ஏதோ கெடுதல் என்று வெகு நாட்களாகச் சிகிச்சை நடந்து கொண்டிருந்தது. இந்த முறையும் உடம்பு மிகவும் பலஹீனமாக இருக்கவும் அவள் தன் மூன்று குழந்தைகளையும் கணவன் வீட்டிலேயே விட்டு விட்டு வந்திருந்தாள். நன்றாக ஆகிக்கொண்டிருந்தவள் திடீரென்று இன்று நலிவாக இருப்பதாகக் கூறினாள். சற்று நேரத்துக்கெல்லாம் வலிப்பு போல ஆரம்பித்து விட்டது.

சட்டென்று பல இடங்களுக்கும் போக ஆட்கள் கூட இல்லாத இந்த நேரத்தில் வயதான தந்தை குமாரஸ்வாமியே வெளியே போகும்படி நேர்ந்தது. நல்ல வேளையாக அது சிவகாமு அம்மாளின் கண்களில் படவே ஐயராமன் உதவிக்கு வந்தான்.

அன்று இரவு முழுவதும் தன் நினைவே இல்லாமல் கிடந்தாள் சாவித்திரி. அவள் தங்கை காயத்திரி தமக்கையின் அருகிலேயே கிடந்தாள்.

ஐயராமனுக்கு அன்று இரவு ஒரு நிமிஷம் கூட ஓய்வு இல்லாமல் போய் விட்டது. அவன் சாவித்திரியின் கணவனுக்குத் தந்தி கொடுத்து விட்டு, டாக்டரிடம் சென்று உண்மை விவரங்களை அறிந்து கொண்டு வந்தான். வைத்தியரின் அபிப்பிராயம் நம்பிக்கை ஊட்டாத வகையாக இருந்தபடியால் ஐயராமன் தன் அன்னையை அழைத்துக் கூறி விட்டு அங்கேயே இருந்தான். ஆனால் கடவுளின் அருள் சாவித்திரியை அன்று காப்பாற்றியது. ஆனால் நான்கு நாட்கள் கழித்து, தன் கணவனும் குழந்தைகளும் சூழ அவள் உயிர் நீத்தாள். துயரத்தில் மூழ்கிப் போயிருந்த அக்குடும்பத்துடன் ஒன்றி விட்டார்கள் சிவகாமு அம்மாளும் ஐயராமனும்.

நாட்கள் கடந்து சென்றன. ஐயராமன் அந்த வீட்டு மகனைப் போலப் போய்ப் பழகி வந்தான். காயத்திரியும் அவனுடன் மிக மிகச் சுவாதீனமாகப் பழகி வந்தாள்.

சாவித்திரியின் குழந்தைகளை அவள் கணவன் அழைத்துக்கொண்டு போய் விட்டான். நாளடைவில் காயத்திரியின் கல்யாணப் பேச்சு துவங்கியது. ஒரு நாள் ஐயராமன் அவர்கள் வீட்டுக்குச் சென்று குமாரஸ்வாமியுடன் பேசிக் கொண்டு இருந்த சமயம் காயத்திரியின் தாயார் அங்கு வந்தாள்.

"ஐயராமா, நீதான் உன் தங்கைக்குப் புத்தி சொல்ல வேண்டும். இன்று ஒரு வரன் அவளைப் பார்க்க வருகிறான். இவள் கல்யாணமே வேண்டாம் என்று பிடிவாதம் பிடிக்கிறாள்" என்றாள் அந்த அம்மாள்.

ஐயராமன் சிரித்துக் கொண்டே காயத்திரியைப் பார்த்தான். "என்ன காயத்திரி, கன்னிப் பெண்ணாகவே இருக்க எண்ணமோ! அதற்குக் காரணம் என்னவோ! அதையாவது சொல். கணுவில்லாத கரும்பு வேண்டுமா, நரம்பில்லாத வெற்றிலையா, அல்லது......"

காயத்திரி அவனை வெறித்து நோக்கினாள். பிறகு மிக்க கோபம் கொண்டவளாக ஆத்திரத்துடன் எழுந்து போய் விட்டாள்.

"யாரப்பா இவளுக்குச் சொல்ல முடியும்! உன் பேச்சு என்றால் அவள் கேட்பாள். கொஞ்சம் சொல்லேன். இன்று மாலை அவர்கள் வந்தால்..."

ஐயராமன் எழுந்து காயத்திரியைத் தொடர்ந்தான். "காயத்திரி, என்ன அசட்டுத்தனம் செய்கிறாய்! விவாகம் செய்து கொள்ளாமலே இருக்கப் போகிறாயா!"

"அது என் இஷ்டம்."

"பெரியவர்கள் மனம் நொந்து இருக்கும் சமயம் அவர்களை நீயும் புண்படுத்துவது அழகல்ல."

"பெரிய தத்துவ உபதேசம் செய்ய வந்து விட்டீர்களாக்கும்! ஒரு பெண் இறந்து ஆறு மாதமாகவில்லை. மற்றப் பெண்ணுக்கு வரன் தேடுகிறார்களே! இவர்களா......"

"பெரியவர்களை அசட்டையாகப் பேசாதே. பெற்ற மனத்தின் தன்மை அது. ஒரு குழந்தையின் துயரத்துக்காக மற்றக் குழந்தைகளின் மகிழ்ச்சியைக் குலைக்கப் பெற்ற மனம் ஒப்பாது. அது சாவித்திரியின் தலைவிதி. அவர்களுடைய துரதிருஷ்டம். இது காயத்திரியின் வாழ்வு. இதிலாவது இன்பம் கிடைக்குமா என்று அவர்கள் ஆசைப் படக் கூடாதா!" என்றான் ஐயராமன்.

காயத்திரி சிறிது நேரம் பிடிவாத



மாக வாயை இறுக்கிப் பிடித்துக் கொண்டு உட்கார்ந்திருந்தாள். பிறகு மெல்ல ஜயராமனைப் பார்த்து, "எனக்கு இப்பொழுது கல்யாணம் வேண்டாம்" என்றாள்.

ஜயராமன் அதைக் கேட்டு வாய் விட்டுச் சிரித்தான். "அப்பாடா! இப்பொழுதுதானே வேண்டாம்! என்றுமே வேண்டாம் என்பாயோ என்று பயந்தேன்" என்று கேலி செய்தான்.

காயத்திரி தலை குனிந்துகொண்டு உட்கார்ந்திருந்தாள். தமக்கையிடம் அவளுடைய அன்பின் ஆழத்தைக் கண்டு வியந்தவனாய் ஜயராமன் தன் வீடு போய் விட்டான். அன்று மாலை ஒரு வரன் வந்தான். காயத்திரி அவனைத் தனக்குப் பிடிக்கவில்லை என்று கூறி விட்டாள். அதன் பிறகு அநேக வரன்கள் வந்தும் காயத்திரியின் பிடிவாதத்தால் விவாகம் தடைப்பட்டே நின்றது.

ஜயராமனுக்கும் ஜாதகங்கள் வந்தன. அவனுடைய மாமா ஒருவர் தன் பெண்ணை அவனுக்குக் கொடுப்பதாக முன் வந்தார். சிவகாமு அம்மாளுக்கும் அவ் விஷயம் பிடித்தமாக இருந்தது. ஜயராமனும் தன் சம்மதத்தைத் தெரிவித்தான். இந்தச் சந்தோஷ சமாசாரத்தைக் காயத்திரியின் வீட்டில் சொல்ல வேண்டும் என்று அவன் சென்றான். குமாரஸ்வாமி தம்பதிகள் அவனை மிகவும் பாராட்டி ஆசீர்வதித்துத் தங்கள் மகிழ்ச்சியைத் தெரிவித்துக் கொண்டனர். காயத்திரி அவ்விடம் இல்லை. அவன் திரும்பும்போது ரோஜாச் செடிகளின் மத்தியில் அவள் குனிந்து நின்று கொண்டிருப்பது தெரிந்தது.

"காயத்திரி!" என்று அழைத்தான் ஜயராமன். அவன் குரலில் ஆனந்தம் கட்டுக்கு அடங்காமல் தன்னிற்று போலும்.



காயத்திரி சட்டென்று நிமிர்ந்து பார்த்தாள். "என்ன!" என்று கேட்டாள்.

"இன்னும் பத்து நாட்களில் உனக்கு ஒரு மன்னி வரப் போகிறாள்" என்றான் ஜயராமன்.

"என்ன!" என்று கேட்டாள் மீண்டும் காயத்திரி ஒன்றும் புரியாதவள் போல.

"நீ ஒரு நாத்தனார் ஆகப்போகிறாய் என்றேன்" என்றான் ஜயராமன்.

"நான் எப்பொழுதோ அந்தப் பதவியைப் பெற்றாகி விட்டதே! ஏன் எங்கள் மணி அண்ணா ஏதாகிலும் பெண்ணை......"

"சீ, சீ! உனக்குத் தோன்றுகிறதே அதைச் சொல்!" என்று கூறி விட்டுச் சிரித்தான் ஜயராமன்.

"பின்னே யாராம்! சீக்கிரம் சொல்லுங்கள்" என்று காயத்திரி துரிதப்படுத்தினாள்.

"இந்த ஜயராமன்னுதான் தன் மாமா பெண்ணை மணக்கப் போகிறான்!"

காயத்திரி விளங்காதவள் போல அவனையே பார்த்தாள். பிறகு அவள் முகம் வாட்டம் கண்டது. இதை ஜயராமன் கவனித்ததும் அவன் துணுக்குற்றான். அக்காவின் பிரிவுக்காகக் காயத்திரி இன்னமும் வருந்திக் கொண்டு மண வாழ்க்கையை வெறுத்திருக்க, அவர்களோடு ஒட்டிப் பழகும் தான் கல்யாணத்தைப் பற்றி மிகவும் குதூகலமாகப் பேசுவதை அவள் ரசிக்கவில்லை என்று நினைத்துக் கொண்டான்.

'அவளுக்கு ரத்த பாசம் அவ்வாறு இருக்கத் தோன்றுகிறது. எனக்கு அப்படி இல்லையே! ஆனால் நான் என் மகிழ்ச்சியை, அவளிடம் பறைசாற்றி இருக்கக் கூடாதுதான்' என்று தனக்குள் எண்ணிக் கொண்டான்.

"நான் போய் விட்டு வருகிறேன், காயத்திரி" என்று கூறி விட்டு அவன் திரும்பினான்.

"நில்லுங்கள்" என்று கூறினாள் காயத்திரி.

அவளது குரலும் நிலைமையும் ஜயராமனைத் திடுக்கிடச் செய்தன.

"என்ன காயத்திரி?" என்றான்.

"நீங்கள் என்ன சொன்னீர்கள்!" என்று கேட்டாள் அவள். அவள் கண்கள் கலங்கியிருந்தன. உடலில் பதட்டம் இருந்தது.

ஜயராமன் அவளையே பார்த்துக் கொண்டு இருந்து விட்டுப் பிறகு பேசினான்.

"இன்னும் பத்து நாட்களில் எனக்குக் கல்யாணம்" என்றான் அவன் ரத்னச் சுருக்கமாக.

"அதற்கு நான் என்ன செய்ய வேண்டும்! என்னுடைய மகிழ்ச்சியைத் தெரிவித்துக் கொள்ள வேண்டுமாக்கும்!" என்று அசிரத்தையாகக் கேட்டாள் காயத்திரி.

"நான் அதெல்லாம் உன்னை எதிர்பார்க்கவில்லை. நான் வருகிறேன்" என்று கூறி விட்டு ஜயராமன் நிற்காமல் வேகமாக நடந்து தன் வீடு வந்து விட்டான். அவன் உடலெல்லாம் சினத்தினால் எரிந்தது. 'எதற்கும் ஓர் எல்லையில்லையா! அவர்கள் வீட்டுத் துக்கத்தை நான் இல்லை என்று சொல்லவில்லை. ஏதோ ஒரு மனிதன் சகஜமாகப் பழகுகிறான் என்பதற்காக அந்தப் பெண் அத்தனை துடுக்காக என்னை வலுவில் இழுத்து அவமதிக்க வேண்டுமோ! அவள் வேண்டுமானால் ஆயிரமத்

நில் வாழட்டும். ஓர் இரவு உதவி புரிந்தேன். அத்துடன் சரி. என் வாழ்வையே அவர்களுக்கு அர்ப்பணம் பண்ணி விட்டேனா! அவளுடைய உடன் பிறந்த அண்ணன் கூட இதைப் பொறுக்க மாட்டான்!' என்று பொருமிக் கொண்டே அவன் உட்கார்ந்திருந்தான். இனி அவர்கள் வீடு போவதில்லை என்று தீர்மானித்துக் கொண்டான். பெரிய மனிதர்களின் சிநேகமே இப்படித்தான். தனக்கு வேண்டிய போது குழைவார்கள். சற்று நெருங்கிப் பழகினால் அடிமை போல நடத்துவார்கள்; என்றெல்லாம் அவன் நினைத்துக் கொண்டான்.

அன்று மாலை அவன் அம்மா கோவிலுக்குப் போயிருந்தாள். ஜயராமன் தனிமையில் உட்கார்ந்திருந்தான். யாரோ உள்ளே வரும் சத்தம் கேட்டு நிமிர்ந்தான்.

காயத்திரி வாசற்படியில் நின்று கொண்டிருந்தாள்.

"அம்மா கோவிலுக்குப் போயிருக்கிறாள்" என்றான் ஜயராமன்.

"நான் அம்மாவைத் தேடிக் கொண்டு வரவில்லை" என்றாள் காயத்திரி.

அவள் பேச்சு ஜயராமனுக்கு அருவருப்பாகவும் திடுக்கிடும் படியாகவும் இருந்தது. ஆயினும் அவன் அதைக் காட்டிக் கொள்ளாமல் அவளிடம் பேச்சுக் கொடுத்தான். "என்ன வேண்டும்!"

"நான் அப்பொழுது நடந்து கொண்டதற்கு மன்னிப்புக் கோர வந்தேன்."

"யார் யாரை மன்னிப்பது! உன் மனம் உன் தமக்கையின் பிரிவிலேயே லயித்து விட்டது. என் மனம் வரப் போகும் என் கல்யாணத்தில் மூழ்கி விட்டது. உலகம் சுயநலம் உருவானது தானே!"

"என்னை நீங்கள் புரிந்து கொள்ள வில்லை. என் தமக்கையின் பிரிவினால் உண்டான துக்கம் இருக்கிறது ஒரு புறம். உங்களுடன் நான் பேசிய வார்த்தைகளின் கருத்தைப் புரிந்து கொள்ள வில்லை நீங்கள். அதை விளக்கவே வந்தேன்" என்றாள் காயத்திரி.

ஜயராமன் தலை நிமிராமல் உட்கார்ந்திருந்தான்.

"என்னோடு இத்தனை நாட்கள் பழகி விட்டு என்னை இப்படி ஆசாபங்கம் செய்வீர்கள் என்று நான் எதிர்பார்க்க வில்லை!" என்று காயத்திரி கூறி முடிப்பதற்குள் அவள் குரல் அடைத்தது.

"என்ன சொல்கிறாய், காயத்திரி! உன்னோடு ஒரு நாளும் நான் அதிகமாகப் பழகியது கிடையாது. நீ குற்றம் சாட்டுவது அழகல்ல. நான் ஏழை, அதனால் எதையும் சுமக்கலாம் என்று நீ நினைக்க வேண்டாம். நீ தயவு செய்து உன் வீடு போய் விடு. நான் தனியாக இருக்கும் நேரத்தில் நீ வந்து பேசுவது உசிதமல்ல. சமூகம் என்னை விட உன்னைத்தான் சிரிக்கும். மேலும் உன் பெற்றோர்களிடம் நான் மிகவும் மரியாதை வைத்திருக்கிறேன்" என்றான் ஜயராமன்.

"எனக்குச் சாதகமாகப் பதில் கூறும் வரை நான் நகர மாட்டேன்" என்றாள் காயத்திரி.

ஜயராமன் அவளைத் தாண்டிக் கொண்டு வீட்டை விட்டு வெளியே போய் விட்டான்.

வீடு திரும்பிய போது அவன் அம்மா அவனை மிகவும் கோபித்துக் கொண்டாள். "வீட்டைப் பார்த்துக் கொள் என்றால் எங்கேடா போய் விட்டாய்! திறந்து கிடந்ததாம். காயத்திரியின் அம்மா அவளை என்னிடம் கேட்டு ஒரு பாத்திரம் வாங்கி வரச் சொன்னாளாம். வந்து பார்த்தால் வீடு திறந்து கிடக்கிறதாம். உன்னைக் காணோம்."

ஜயராமன் ஒன்றுமே பதில் சொல்ல வில்லை. காயத்திரியின் பேச்சு என்னவோ செய்தது. அவள் பணக்கார வீட்டுப் பெண். இவனோ சாதாரணமான மனிதன். ஊழியம் செய்து பிழைக்க வேண்டியவன். தான் என்னவோ பிரியமாகப் பழகினாலும் அந்தக் குடும்பத்தில் முறை தவறிப் பழகிய தில்லை. காயத்திரி தன் பேச்சில் இவனைக் கண்ணியம் குறைந்தவன் போல் குறிப்பிட்டது அவன் மனத்தைத் தைத்தது. அவன் யாரிடமும் ஒன்றும் காட்டிக் கொள்ள வில்லையாயினும் அதற்குப் பிறகு காயத்திரியின் வீட்டுக்குச் செல்வதைக் குறைத்துக் கொண்டான். அந்தப் பெண்ணோடு பேசுவதையே அவன் நிறுத்திக் கொண்டு விட்டான்.

ஜயராமனுக்குக் குறிப்பிட்ட தினத்தில் கல்யாணம் நடந்தது; வரும்போது பெண்ணையும் அழைத்துக் கொண்டு வந்தனர். பக்கத்து வீட்டினர் வந்து புது மணப் பெண்ணைப் பார்த்து விட்டு, ஜயராமனையும் அவளையும் நன்கு ஆசீர்வதித்துச் சென்றனர்.

ஜயராமனின் மனைவி கமலா நல்ல குணமுள்ள பெண்ணாக இருந்தாள். குடும்பத்தில் பொருந்தி மாமியாரிடமும் கணவனிடமும் மிக்க அன்பும் மரியாதையும் காட்டிப் பழகி வந்தாள். நாளடைவில் காயத்திரிக்கும் அவளுக்கும் மிக்க நட்பு உண்டாகி விட்டது.

ஒரு நாள் ஜயராமன் மாலை வேளையில் தன் வீட்டுக் கூடத்தில் உட்கார்ந்து கொண்டிருந்தான். அவன் தாயார் கமலாவின் தலையில் பூச்சரத்தைச் சரி பார்த்துக் கொண்டிருந்தாள்.

அப்பொழுது கமலா காண்பதற்கு மிகவும் கவர்ச்சிகரமானதொரு தோற்றத்துடன் இருந்தாள்.

"அடுத்த மாதம் நம் வீட்டில் பூச்சூட்டவேண்டும். நல்ல பச்சையில் ஒரு புடவை வாங்கிக் கொண்டு வா ஜயராமா!" என்றாள் தாய்.

ஜயராமன் மனைவியைப் பார்த்தான். அவள் நாணத்துடன் முகத்தை வேறு பக்கம் திருப்பிக் கொண்டாள். அப்பொழுது அவளுடைய உடல் அசைவில், இடுப்பில் கட்டியிருந்த தங்க நிறப் புடவையும், அதன் கறுப்புக் கரையும் அவள் அழகுக்கு வரையிட்டுக் காண்பித்தது போல இருந்தன.

"இது ஏது! கல்யாணப் புடவையா!" என்று கேட்டான் ஜயராமன்.

"இல்லையே, பக்கத்து வீட்டுக்காரர்கள் கல்யாணத்துக்குப் பிறகு விருந்து வைத்துக் கொடுத்தது. அவர்கள்தான் இவள் வேறு, காயத்திரி வேறு என்று பாவிக்க வில்லையே! அந்தப் பெண் அதற்கு மேல். எத்தனை பரிசுகள் கொண்டு கொடுத்து விட்டது! எதையும் மறுக்க முடியாமல் பேசிக் கொடுத்து விடுகிறது! எனக்குக்கூடச் சில சமயம் சங்கோசமாக இருக்கிறது. அவர்களுக்கு இதெல்லாம் ஒரு பிரமாதமில்லை. நமக்கு அதெல்லாம் மலை. கமலாவுக்கு ஒரு நூல் புடவை வாங்க யோசிப்பவர்கள் நாம். அவர்கள்..."

"அப்படி ஏன் வாங்கிக் கொள்கிறீர்கள்!" என்று ஜயராமன் கடிந்தான்.

"எப்படி முகத்தில் அடித்தது போலத் திருப்புவது! தாட்சண்யம்தான்" என்று பதிலளித்தாள் அம்மா.

"இன்று பாருங்கள், இந்த மோதிரத்தைக் கொடுத்து விட்டுப் போயிருக்கிறாள். நான் வாங்க மாட்டேன் என்று எவ்வளவோ மறுத்தேன். அவள் தாயார் என் எதிரே நின்று அவள் என்னைக் கட்டிக் கொண்டு கண்ணீர் விடத்

தொடங்கி விட்டாள். "என் அக்கா இருந்தால் அவனுக்குக் கொடுப்பேன். உன்னை அவளாக நினைத்துக் கொடுக்கும்போது வாங்க மாட்டேன் என்கிறாயே!" என்று அவள் சொல்லவும் அவள் தாயாரும் கண்ணீர் விட்டு விட்டாள்" என்றாள் கமலா.

"ஆமாம், நானும் தான் பேசாமல் இருக்கும் படியாகி விட்டது" என்றாள் தாயார்.

ஜயராமனுக்கு ஏனோ அவர்கள் பேச்சு ரசிக்கவில்லை. ஆனால் ஒன்றும் வெளிப்படையாகச் சொல்லாமல் அவன் அவர்களுடன் வேடிக்கையாகப் பேசுவது போலப் பேசினான்.

"உம், நீ அவர்கள் வீட்டுப் பெண்ணாகி விட்டாயா!" என்று கேட்டான்.

"ஆமாம். நேற்று அம்மா கூட ஏதோ பேச்சு வாக்கில் காயத்திரியிடம் என்னை மன்னி என்று குறிப்பிட்டார்கள்" என்று ஆரம்பித்தாள் கமலா.



பம்பாய் நகரில் பிரதிஷ்டை செய்துள்ள ஸ்ரீ வெங்கடேச தேவஸ்தானத்துக்கு ஏப்ரல் நாலாம் தேதியன்று வெள்ளி விழா வெகு விமரிசையாக நடந்தது. இந்த விழாவை ஸ்ரீ எம். அனந்தசயனம் அய்யங்கார் அவர்கள் ஆரம்பித்து வைத்தார்கள். ஸ்ரீ வெங்கடேசப் பெருமாளுக்குச் சகஸ்ர கலசாபிஷேகத்துக்காகப் பரிமள தீர்த்தம் நிறைந்த ஆயிரத்து எட்டு கலசங்கள் வைத்திருப்பதைப் படத்தில் காணலாம்.

"நேற்று நான் காயத்திரியிடம் கேலியாக 'உனக்கு மருமகன் பிறக்கப் போகிறான்' என்றேன். அவள் உடனே கிளம்பி விட்டாளே! 'என் அக்காவின் மகன் என் மகன். மருமகன் என்ன உறவு! இத்தனை நாட்களாக மாமாவாக இருந்தவர் இன்று அண்ணனாக மாற முடியாது' என்று ஒரே போடு போட்டாளே, பார்க்க வேண்டும்" என்றாள் அம்மா.

ஜயராமன் மௌனமாக உட்கார்ந்திருந்தான். பிறகு சற்றுப் பொறுத்து, காயத்திரி அளித்த பரிசுகளைக் கொண்டு காட்டும்படி கேட்டான். இரண்டு பட்டுப் புடவைகள், நான்கைந்து உயர்ந்த ரவிக்கைகள், இரண்டு வெள்ளிக் கிண்ணங்கள், ஒரு தங்க மோதிரம் யாவையும் கண்டான் ஜயராமன். அவன் மனம் அவைகளை மதிப்பிடத் தொடங்கியது.

அன்று இரவு சாப்பாடு முடிந்ததும், ஜயராமன் அடுத்த வீட்டுக்குச் சென்றான். சற்று நேரம் ஏதேதோ பேசிக் கொண்டிருந்து விட்டு வீடு திரும்பும்போது காயத்திரி வாசல் தாழ்வாரத்தில் உட்கார்ந்திருப்பதைக் கண்டான். எப்பொழுதும் அவள் அங்கிருப்பாள் என்று அறிந்தே அவன் அவளருகில் சென்றான்.

"காயத்திரி, நீ ஏன் கமலாவுக்கு அவ்வளவு பரிசுகள்—அதுவும் விலையுயர்ந்த பரிசுகள் கொடுத்திருக்கிறாய்!" என்று ஜயராமன் கேட்கும்போது அவன் குரல் சற்று அதட்டலாகவே அமைந்தது.

"ஏன்!" என்று கேட்டாள் காயத்திரி புருவத்தை உயர்த்தியபடியே.

"எங்களால் ஒரு நாளும் அவைகளுக்குப் பிரதி செய்ய முடியாது. பதிலுக்கு ஒன்றும் செய்ய முடியாமல் பரிசை மாத்திரம் பெற்றுக் கொள்ள எந்த மனிதனும் இணங்க மாட்டான். அதைவிட அவன் உள்ளமே எரிந்துவிடும்."

"வெகுமதி கொடுப்பவர்கள் பதிலை எதிர் பார்ப்பதில்லை."

"வாங்குபவர்கள் அப்படி எண்ண முடியாது."

"நான் கொடுக்கவில்லை. வாங்கியதைத் தான் திருப்புகிறேன் என்று வைத்துக் கொள்ளுங்களேன்" என்றாள் காயத்திரி.

"வஞ்சம் தீர்த்துக் கொள்கிறாயா!"

"இருக்கலாம். அவரவர்களுக்கு ஒரு பாணி" என்று அலட்சியமாகப் பதில் கூறினாள் காயத்திரி.

"அதற்கு மிகவும் தப்பான முறையைக் கையாண்டு விட்டாய், காயத்திரி. அவள் நிரபராதி. கள்ளம் கபடமற்று உன்மீது அன்பு செலுத்துகிறாள். அவளை ஆயுதமாகக் கொண்டு என்னை அடிக்கப் பார்க்கிறாய். என்மீது விழாமல் அடி முழுவதும் அவள்மீது விழலாம்" என்றான்.

"கடிபட்டவன் கழி உடைந்துவிட்டதே என்று கவலைப்படுவதில்லை. பாம்பின்மீது அடி விழுந்ததா என்பதுதான் அவன் குறி!" என்றாள் காயத்திரி.

"பாம்பின்மீது படவில்லை!" என்று கம்பீரமாகப் பதில் சொன்னான் ஜயராமன்.

"நன்றாகப் பட்டு விட்டது என்பது எனக்குத் தெரியும். இல்லாவிட்டால் ஒரு வருஷமாக முகம் கொடுத்துப் பேசாதவர்கள் வலுவில் பேச வர மாட்டார்கள்" என்றாள் காயத்திரி, முன்னிலும் அதிகமானதொரு அலட்சியக் குரலில். பிறகு விடுவிடென்று உள்ளே போய் விட்டாள்.

ஜயராமன் வீட்டுக்கு வந்து அன்று முழுவதும் யோசனையிலேயே காலம் கழித்தான்.

"என்மீது உங்களுக்குக் கோபமா! இனிமேல் நான் ஒரு துரும்புகூட அவர்களிடமிருந்து பெற்

றுக்கொள்ள மாட்டேன். அன்பைப் புறக்கணிக்க முடியவில்லை. இனிமேல் அப்படி......" என்று கமலா அவனிடம் மன்றாடினாள்.

"அதெல்லாம் பரவாயில்லையடி, அசடே" என்று அவன் அவளை ஆசுவாசப்படுத்திவிட்டான்.

ஆனாலும் அன்று காரியாலயத்துக்குச் சென்றதும் மும்முரமாக வேலையை ஒருமாதிரி செய்து முடித்து விட்டு மாலை வரும்போது அவன் ஒரு நிர்மானத்துடன் வந்தான்.

"அம்மா, பத்து நாளைக்கு நான் மங்களூருக்குப் போக வேண்டுமாம். கமலாவையும் அழைத்துப் போகிறேன். அங்கே அவள் ஒன்றுவிட்ட அத்தை இருக்கிறாளாம்" என்றான் ஜயராமன்.

சந்தோஷமாக வழி அனுப்பி வைத்தாள் அவன் தாயார்.

"நான் காயத்திரியிடம் சொல்லிவிட்டு வருகிறேன்" என்றாள் கமலா.

"அதற்கெல்லாம் நேரமில்லை. சீக்கிரம் சாமானை எடுத்து வைத்துக் கொள். இன்னும் ஒரு மணி கூட இல்லை ஊருக்குக் கிளம்ப. நான் அவளுக்குக் கடிதம் எழுதிக் கொடுக்கிறேன்" என்று ஜயராமன் அவளைத் துரிதப்படுத்தி அனுப்பி விட்டு, ஒரு கடிதத்தை எழுதி மூடித்துத் தாயாரிடம் கொடுத்து விட்டுக் கிளம்பினான்.

ஜயராமனும் கமலாவும் திரும்பி வரும்போதே அடுத்த வீட்டில் யாருமே இல்லை என்பதற்கு அடையாளமாக வீடு பூட்டிக் கிடந்தது.

"அம்மா, பக்கத்து வீட்டினர் எங்கே போயிருக்கிறார்கள்! வீடு பூட்டிக் கிடக்கிறதே!" என்று கேட்டாள் கமலா, வந்து இறங்கினதும். ஜயராமனும் அதே கேள்வியைக் கேட்டான்.

"அதை ஏன் கேட்கிறாய்! நீ கொடுத்த கடிதத்தை அன்றே அவர்களிடம் கொண்டு கொடுத்தேன். பெரியவர் ரொம்ப சந்தோஷத்தோடு வாங்கிப் படித்துக் காட்டினார். 'தங்கையாகப் பாவிக்கிறேன்' என்று எழுதியிருக்கிறான். இவன் பணத்தால் செய்தால்தானா தெரியும் அது! இருந்தாலும் அவன் இஷ்டப்படியே அந்த ரூபாய்க்கு ஒரு கருகுமணி சங்கிலி செய்து விடுகிறேன்' என்று கூறினார். அந்த அம்மாளும் அதை ஆமோதித்தாள்......" என்று அவன் தாயார் கூறிக் கொண்டிருந்தாள்.

ஜயராமனுக்குத் தன் கடிதம் நினைவுக்கு வந்தது. "நான் காயத்திரியை என் தங்கையாகவே பாவித்து வருகிறேன். என் விவாகத்தின்போது அவளுக்கு ஒரு நல்ல வெகுமதி கொடுக்கவேண்டும் என்ற எண்ணம். ஆனால் ஏழையின் கனவு ஈடேற நாளாகுமல்லவா! என் நினைவு என்றும் மறையாமல் அவளுக்கு ஏதாவது வாங்கிக் கொடுங்கள்" என்று எழுதி இரண்டு நூறு ரூபாய் நோட்டுகளும் வைத்திருந்தான் அவன்.

"...... மறுநாள் காலை தட்டான் வந்தான் என்று என்னைக் கூப்பிட்டார்கள். அந்தப் பெண் திடீரென்று பயித்தியமாகப் பிதற்ற ஆரம்பித்து விட்டது. 'சாவித்திரி, நீ ஏன் போக வேண்டும், நான் ஏன் இருக்க வேண்டும்' என்றும் 'பாவி, பழி வாங்கி விட்டானே!' என்றும் ஒன்றுக்கு ஒன்று தோதில்லாமல் கத்தத்தொடங்கியது. டாக்டர் வந்தார். நரம்புத் தளர்ச்சி என்றார். மூளைக்கோளாறு என்றார்கள். அவர்களும் 'ஜயராமன் இருந்தால் எவ்வளவோ தைரியமாக இருக்கும்' என்று சொன்னார்கள்..." என்று சொல்லி முடித்தாள் தாயார்.

"இப்பொழுது எங்கே அவர்கள்!"

"நான்கு நாட்கள் இப்படியே கத்தினாள். பிறகு டாக்டர் அவளைப் பெங்களூருக்கு அழைத்துப் போகச் சொன்னார். அங்கே வைத்தியம் செய்த பிறகு இட மாற்றத்துக்காக வடக்கே போகப் போகிறார்களாம்."

கமலா 'கோ' வென்று அழுது விட்டாள். ஜயராமன் முகத்தைத் திருப்பிக் கொண்டு அப்பால் போய் விட்டான்.

கமலா அவனைத் தேடிக் கொண்டு வந்தாள். "எங்கள் ஊர் மூக்குநுனிப் பிள்ளையார் மிகவும் சக்தி வாய்ந்தவர். காயத்திரிக்காக நான் ஒரு மண்டலம் பிரதட்சிணம் செய்வதாக வேண்டிக் கொள்ளட்டுமா! என்னால் அவள் அன்பை மறக்கவே முடியவில்லை" என்றாள் அவள்.

"உன் மன நிம்மதிதான் முக்கியம், கமலா. ஊருக்குப் போய் அதைச் செய்து விட்டு வா! நீ வேண்டிக் கொண்டால் கட்டாயம் கடவுள் கேட்பார்" என்றான் ஜயராமன்.

அதீதமாக உணர்ச்சி வசப்பட்ட தன் கணவனை ஆச்சரியத்துடன் நோக்கினாள் கமலா. "ரத்த பாசத்தை விட மேலானதாக இருக்கிறதே!" என்றாள்.

* * *

அது நடந்து ஆறு மாதங்கள் சென்றன. கமலா ஒரு நாள் ஒரு மஞ்சள் கடிதத்தைக் கொண்டு வந்தாள். "பார்த்தீர்களா! என் பிள்ளையார் என்னைக் கைவிட வில்லை. காயத்திரிக்கு வருகிற வெள்ளிக்கிழமை காசியில் கல்யாணம்" என்று கூறினாள்.

"போகட்டும், நன்றாக சௌக்கியமாக, கணவனுடைய அன்புடன் நீடூழி வாழட்டும்" என்றான்.

"அந்தப் பெண் என்னவோ நம்மிடம் மிகவும் பழகி விட்டாள். மேலே பார்த்தால் தெரியா விட்டாலும் நீங்கள் அவள்மீது அபார வாஞ்சை வைத்து விட்டீர்கள் போலிருக்கிறது. இந்த ஆறு மாத காலத்துக்கு இன்றுதானே உங்கள் முகத்தில் தெளிவு ஏற்பட்டிருக்கிறது!" என்றாள் கமலா.

"ஒரு தப்பை இன்னொரு தப்பினால் சரிப்படுத்த முடியாது கமலா. ஒருதலைக் காதல் என்ன பாடு படுத்தும் என்று நீ அறிவாயா!"

"நன்றாக இருக்கிறது. காயத்திரியின் பயித்தியம் உங்களிடம் தொத்திக் கொண்டுவிட்டதா!"

"இல்லை, கமலா. உன்னிடம் சொல்ல வேண்டும் என்று நினைத்தேன். இன்றுதான் என் மனம் நிம்மதியாயிருக்கிறது. அவள் அறியாமையினால் ஒரு தீங்கு செய்ய, உன் மீதிருந்த அன்பின் காரணமாக நான் அவளைப் பழி வாங்க, அது பிறகு எப்படி எப்படியோ......"

"வேண்டாம். சொல்ல வேண்டாம். என்னிடம் அவள் அதீத அன்பு காட்டிப் பரிசுகளைச் சுமத்தினதின் பொருள் விளங்கி விட்டது."

"எப்படித் தெரிந்து கொண்டாய்!"

"நானும் ஒரு பெண்தானே! ஒருவரின் பரிபூர்ண அன்பை அனுபவிக்கிறேனே — அதை இழந்தால் எப்படி இருக்கும் என்பது தெரியாதா! நான் முட்டாளா!" என்றாள் கமலா.

"என்மீது கோபமா!" என்று ஜயராமன் குழைந்தான்.

"தங்கத்தைக் கையில் வைத்துக் கொண்டு அதை எல்லோரும் ஆசையோடு பார்க்கிறார்களே என்றால் அது தங்கத்தின் குற்றமுமில்லை, அதை வைத்துக் கொண்ட கையின் குற்றமுமில்லை!"

"இந்த ரத்தினத்துக்கு ஏற்ற தங்கமாக என்னை ஆக்கு, பகவானே" என்று ஜயராமன் முழு மனத்துடன் கடவுளை வேண்டிக் கொண்டான்.

போட்டிக் கதை — 9

# எரிந்த மரம்

லோபோ பிரபு

நான் அப்போது புலிவேட்டையில் ஈடுபட்டிருந்தேன். மரங்கள் அடர்ந்த காட்டில் புலியின் அடிச் சுவட்டைப் பின்பற்றிப் போய்க் கொண்டிருக்கும்போது அந்த ஆச்சரிய சம்பவம் நடந்தது. வேட்டையாடும் பிரதேசத்தைச் சார்ந்த காட்டுப் புதர்களின் இடையே நான் நடமாடிக் கொண்டிருக்கையில் ஒரு மரத்தின் பொந்திலே மனிதன் அளவுள்ள ஒரு பறவையைக் கண்டேன்! சிறிது நேரம் என் கண்களையே நான் நம்ப முடியவில்லை. ஆச்சரியத்தில் ஆழ்ந்தேன். மறுபடியும் கண்களைக் கசக்கிக் கொண்டு உற்றுப் பார்த்தேன். பிறகு அந்த உருவத்தை நோக்கி நடந்தேன். கடைசியில், அது ஒரு மனிதன் உருவே என்பதையும், பறவைகளின் இறகுகளால் அமைந்த நீள அங்கியால் அவன் உடல் முழுதும் மூடியிருந்ததையும் கண்டேன். அவன் தலையில் இறகுகளால் தைக்கப்பட்டிருந்த பாகை ஒன்று இருந்தது. கேள்விப்பட்ட அநேக விசித்திரக் கதைகள் என் நினைவில் கொந்தளித்தன. மனம் குழம்பி, திக்பிரமையடைந்து நின்றேன்.

இந்த நிலையில் எவ்வளவு நேரம் இருந்தேன் என்று எனக்குத் தெரியாது. நல்லகாலமாக, அந்த விசித்திர மனிதனின் பார்வை என்மீது விழவில்லை. எனக்கு எதிர்ப்புறமாக, அவன் எதையோ உற்றுப் பார்த்துக் கொண்டிருந்தான். ஒரு நதி அங்கே கீழ் நோக்கித் தவழ்ந்து ஓடிக்கொண்டிருந்தது. அதற்குப் பின்னே வெகு தூரத்தில் அழகிய மலைத் தொடர்கள், கம்பீரத் தோற்றத்துடன் நின்று கொண்டிருந்தன. இயற்கையின் மௌனத் திருக்கோலத்தை கண் கொட்டாமல் பார்த்து ரசித்த வண்ணம் தன்னை மறந்த நிலையில் நின்றுகொண்டிருந்தான் அந்தப் பறவை மனிதன்.

** ** **

நாட்டை விட்டுக் கிராமத்துக்கு வந்ததும், முதலாவதாக நான் கண்ட விசித்திர மனிதனைப் பற்றிய தகவல்களை விசாரிக்கத் தொடங்கினேன். கதை கதையாக அவரைப் பற்றிச் சொன்னார்கள். சென்ற சுமார் பத்து வருஷங்களாக அவர் அந்தக் காட்டிலுள்ள ஒரு மரத்தின் பொந்தில் வாழ்வதாகவும், கிராமத்துடனோ, அல்லது கிராமத்தாருடனோ எவ்விதத் தொடர்பும் இல்லாமல் தனித்த வாழ்க்கை நடத்துவதாகவும் அறிந்தேன். கனி கிழங்கு வகைகளையும், காய், கொட்டை முதலியவைகளையும் ஆகாரமாகக் கொண்டு வாழ்ந்தார். பயங்கரக் காட்டு விலங்குகளுடன் சகஜமாகப் பழகுவதே, அவர் பொழுது போக்கு. அவற்றுக்கு ஆகாரம் ஊட்டுவதையே அவர் கடமையாகக் கொண்டிருந்தார். பறவைகள் எவ்வித அச்சமும் இல்லாமல் அவருடன் கொஞ்சியும் குலவியும், அவர் அளிக்கும் உணவு தானியங்களை உண்டு களித்தும், அவரை எப்போதும் அன்புடன் சூழ்ந்து கொண்டிருந்தன. அவர் வசித்த மரத்திலுள்ள பொந்தின் மற்றொரு புறத்தில் நல்ல பாம்பு ஒன்று வாழ்ந்து வந்தது. அநேக காட்டு விலங்குகள், அவர் ஆர்வத்துடன் தம் கையால் ஊட்டும் உணவை உண்டு, மகிழ்ந்து சென்றன. வேங்கைகூட அவருக்கு எந்தவிதத் தீங்கும் செய்யவில்லை. உண்மையில் அவருக்குக் கட்டுப்பட்டு நடந்ததென்றே சொல்லலாம். அந்த அதிசயத்தை என்னவென்று சொல்வது!



டில்லியில் பல்வேறு தென்னிந்திய ஸ்தாபனங்களில் சென்ற முப்பது ஆண்டுகளாக இடைவிடாது சிறப்புப் பணி ஆற்றிய பிரமுகர் ஸ்ரீ ஏ. வி. ஓம். நாராயணன் அவர்களுக்குத் தில்லித் தமிழ்ச் சங்கம் சமீபத்தில் சிறப்பான வகையில் பிரிவு உபசரிப்பு ஒன்றை நடத்தியது. சங்கத் தலைவர் டாக்டர் கே. எஸ். கிருஷ்ணன் அவர்கள் விழாவுக்குத் தலைமை வகித்தார்கள். ஸ்ரீ நாராயணனைப் பாராட்டிப் பலர் பேசினார்கள். உபசரிப்பில் கலந்து கொண்ட பிரமுகர்கள் பலரையும் மேலேயுள்ள படத்தில் காணலாம்.



இவற்றை யெல்லாம் கேள்விப் பட்டதும் என்னுடைய ஆர்வம் அதிகரித்தது. தனிமையில் வாழும் அவரைப் பற்றி, மேலும் அறிந்து கொள்ளத் தீர்மானித்தேன். அவர் வசித்த மரத்துக்கருகே, பல தடவை சென்றேன். அவருடைய கவனத்தை என் பக்கம் இழுக்கப் பல முயற்சிகள் செய்து பார்த்தேன். ஆனால் அவர் எதற்கும் அசைந்தபாடில்லை. என்னைக் கவனித்ததாகவே தெரியவில்லை. எத்தனையோவித பயங்கரப் புயற்காற்றை யெல்லாம் பொருட்படுத்தாமல் மௌனப் புன்னகையோடு நிமிர்ந்து நிற்கும் உன்னத மலைச் சிகரம் போல் விளங்கினார்.

நான் மிகவும் சலிப்படைந்து விட்டேன். ஒரு வேளை அந்த ஆசாமி இயற்கையிலேயே ஏதோ ஒரு குறை உள்ளவர் போலும் என்று எண்ணினேன். உலகத்தார் தம்மைச் சரிவரக் கவனிக்க மாட்டார்கள் என்று நினைந்து, இப்படி விரக்தியோடு வாழ்கிறாரோ என்று அதற்குக் காரணம் காட்டியது என் பகுத்தறிவு. பிறவி ஊமையோ செவிடோ என்று நினைத்து ஒருவாறு என்னை நானே சமாதானம் செய்து கொண்டேன். 'அதையும் சரியாகச் சோதனை செய்து விடுவோமே' என்றது ஆராய்ச்சி அறிவு.

வருவது வரட்டும் என்று, அவரை நோக்கி உரக்கப் பேசினேன். அதாவது. அவர் காதுகள் செவிடு படும்படி முழக்கினேன். எனக்குத் தெரிந்த எல்லா மொழிகளிலும் பேசி விட்டேன். என்னை அவர் புறக்கணிக்க முடியாத அளவுக்கு நடந்து கொண்டேன்.

என்னுடைய அந்தக் கடைசி ஆயுதம், பலன் அளித்து விட்டது! ஆயினும், நான் திடுக்கிட்டேன். அவர் பேசினார். அழகாகப் பதில் கூறினார். அது சுருக்கமாகவும் அழுத்தமாகவும் இருந்தது. அதைவிட அவர் உச்சரித்த முறை என்னை ஆச்சரியத்தில் ஆழ்த்தியது. அதாவது, ஆங்கில மொழியில் அவர் எனக்கு அளித்த பதில், ஆங்கில நாட்டின் தலை சிறந்த சர்வகலாசாலையான 'ஆக்ஸ்போர்டில்' . படிப்பவருக்கே உரித்தான உச்சரிப்பில் அமைந்திருந்தது. 'காட்டின் மத்தியில் விலங்குகளுடன் வாழும் ஒருவனுக்கு, உலக நாகரிகத்தின் சிகரமாய் விளங்கும் இந்த மொழிப் பயிற்சி எப்படித்தான் கிடைத்ததோ!' என்று ஒரு கணம் நான் மயங்கினேன்.

"மனிதர் தொடர்பை நான் நாடுவதில்லை."

இதுதான் அவர் வாயிலிருந்து வெளி வந்த பதில். அவரை ஆராய்ந்தறிய கிடைத்த ஓர் அரிய வாய்ப்பை விடுவேனா! நானும் சம்பாஷணையை வளர்க்கத் திட்டமிட்டுக் கொண்டு, பின்வருமாறு பதில் கூறினேன்.

"புது வகையான வாழ்வை நாடி அலைந்து கொண்டிருப்பவன் நான். அத்தகைய ஒருவனின் தொடர்பு உங்களுக்குக் கூடாதா!"

"உன்னுடைய வாழ்க்கை முறை மிக மிகப் பழையதாயிற்றே! வேட்டையாடினவன்தானே ஆதிகால மனிதன்!" என்றார் அவர். அவருடைய இந்த வாக்கியத்தில் தொனித்த ஏளனமும் கையாண்டியும் என்னைத் திணற அடித்துவிட்டன. நான் ஏதோ சமாதானம் சொல்லத் தொடங்கினேன். வேட்டையாடுவது என் பிழைப்புக்காக அல்ல என்றும், ஆடு மாடுகளையும் அக்கம் பக்கத்து ஊர்வாசிகளையும் கொன்று தின்று வரும் புலியொன்றைக் கொல்ல வந்திருப்பதாகவும் விளக்கினேன்.

"ஜனங்களை நீங்கள் காப்பாற்றி விடுவதாக எண்ணம் போலும்! அவர்கள் என்றைக்காவது ஒரு நாள் அழிய வேண்டியவர்களே அல்லவா! அவர்கள் புலியிடமிருந்து தப்பினாலும், கடைசியில் புழுப் பூச்சிகளுக்குத்தானே இரையாகப் போகிறார்கள்!" என்றார் அவர்.

"என்னை மன்னிக்க வேண்டும். எதையோ பேசி விஷயத்தை மழுப்ப வேண்டாம் என்று கேட்டுக் கொள்கிறேன். உங்களைக் குறித்து அறிந்து கொள்ள வேண்டுமென்பதே என் ஆசை!" என்று பரிவோடு கூறினேன்.

அதற்கு அவர் பதிலே பேசவில்லை. எனக்கும் வேறு என்ன பேசுவது என்று தெரியவில்லை. இது வரை மரத்தின் மேல் கிளைகளுக்கிடையில் இருந்தவர், மரத்தை விட்டுக் கீழே இறங்கினார். காட்டில் பழுத்த செந்நிறக் கனிகள் சிலவற்றைப் பொறுக்கி எனக்குக் கொடுத்தார். என்னைக் கூர்ந்து பார்த்துக் கொண்டே புன் சிரிப்போடு, "இத்தகைய ஆவல் உனக்கு இருக்கக் கூடாது. இதெல்லாம் எனக்குப் பிடிப்பதில்லை. ஆயினும் உன் குரலில், துன்பம் தந்த பரிசாகக் கிடைத்த அறிவின் ஒளியைக் காண்கிறேன். முதலில் உன்னைப் பற்றி நான் தெரிந்து கொள்ள விரும்புகிறேன்" என்றார் அவர்.

இதற்கு மேல் எனக்கு எல்லாம் சுலபமாகப் போய் விட்டது. சகஜமாகக் கலந்து அவருடன் உறவாடத் தொடங்கி விட்டேன். தன்னுடைய இருப்பிடத்துக்கு வரும்படி என்னை அன்புடன் அவர் அழைத்தார். அந்த அழைப்பை நான் மறக்க முடியுமா! சம்மதித்து அவருடன் மரத்தின் மீது ஏறினேன்.

அவர் அறையில், அதாவது மரப் பொந்தில் அமைந்த கூண்டில் பல விலங்குகளின் தோல்கள்

இருந்தன. அவற்றுடன் ஒரு பக்கத்தில் நாகப் பாம்பு ஒன்று படுத்திருந்தது. இவரைப் பற்றி ஊரார் சொன்ன செய்திகளெல்லாம் வெறும் கட்டுக் கதைகள் என்று நான் எண்ணியிருந்தேன். எல்லாவற்றையும் நேரில் பார்க்கும் சந்தர்ப்பம் வந்த போது, எனக்கு அச்சம் தலையெடுத்தது.

என்னைக் கண்டதும் பாம்பு தலையெடுத்தது. "அது ஒருவிதத் தீங்கும் செய்யாது" என்று அவர் எனக்குத் தைரியம் கூறிப் பாம்பைத் தம் பாதத்தால் மெதுவாகத் தள்ளினார். அது அந்த அறையின் வாசற்படி வரையில் சென்று அங்கு நிம்மதியாகச் சுருண்டு படுத்துக் கொண்டது. நான் அந்த அறையில் உட்கார்ந்தேன். பக்கத்தில் பாம்பிருந்தும், எனக்கு ஒருவித அமைதி ஏற்பட்டது. ஆனால் என்னுடன் இருந்த அவருக்கு, இது வரையில் இயற்கையாகப் பொருந்தியிருந்த அமைதி ஓரளவு குலைந்ததாகவே தோன்றியது. மேற் கொண்டு நாங்கள் அளவளாவும் போது, அநேக பறவைகள் அவரிடம் பறந்தோடி வந்தன. அவரைச் சூழ்ந்திருந்த கூடுகளுக்குச் சில சென்றன. இன்னும் சில அவருடைய அன்பான கரங்களிலும் தோள்களிலும் உட்கார்ந்து குலவின. அவற்றை அவர் குழைவோடு தடவிக் கொடுத்து அனுப்பினார். ஒரு பறவை அந்த நாகப் பாம்பின் அருகிலேயே அச்சமற்று உட்கார்ந்தது. அந்தக் குருவி கண்ணாடி மணி போல் ஒளிவிடும் தன் சின்னஞ் சிறு கண்களால் மாறி மாறி ஏறிட்டுப் பார்த்த போது, அதைத் தம் விரல்களால் அவர் தடவிக் கொடுத்தார். தன்னை மறந்து அது அவர் மடியிலேயே தூங்கத் தொடங்கி விட்டது.

"விலங்குகள் மிகவும் சாதுவானவை, தீங்கு செய்ய மாட்டா. அன்பால் மனம் கரையும் போது, தமக்குக் கிடைக்கும் உணவையும் மற்றவருக்காகத் தியாகம் செய்யும் பெருங் குணத்தை அவற்றிடம் காணலாம். அவற்றிடம் உள்ள கோரப் பல்லும் கூரிய நகங்களும், ஹிம்சிப்பதற்கென்று ஏற்பட வில்லை. உண்மையில் தற்காப்புக்கென இயற்கையன்னை அவற்றுக்கு அளித்துள்ள சாதனங்களே!" என்று அவர் கூறினார்.

ஆனால், என் அனுபவம் இதற்கு மாறான செய்தியை அறிவித்த தென்பதை நான் எடுத்துரைத்தேன்.

"பழக்கத்தின் காரணமாகவே ஆகார முறை அமைகிறது. மனிதர்களைவிட, மிருகங்களை இந்தப் பழக்கத்திலிருந்து சுலபமாக மாற்றி விடலாம்" என்றார் அவர்.

அவர் அவ்வாறு சொன்னதைக் குறித்து வாதாட நான் விரும்ப வில்லை. என் நோக்கம் மிருகங்களைக் குறித்து அறிவதல்ல. அவரைப் பற்றிச் சரிவரத் தெரிந்து கொள்ள வேண்டும் என்பதே. ஆனால் அவரோ தம்மைப் பற்றி எதையும் சொல்லாமல் மற்ற ஏதேதோ விஷயங்களின் மீது என் கவனத்தைத் திருப்பி விட்டுக் கொண்டேயிருந்தார். மரத்தின் மேல் ஒரு சிறுத்தையும் அதன் இரு குட்டிகளும் ஆனந்தமாய் விளையாடிக் கொண்டிருப்பதைச் சுட்டிக்காட்டி, "அவற்றை மேலே வரச் சொல்லட்டுமா!" என்று கேட்டார்.

எனக்குக் கலக்கம் அதிகரித்தது. அவரைப் போல் பேத புத்தியில்லாமல் அபாயகரமான விலங்குகளிடம் சகஜமாகப் பழகும் மன நிலை எனக்கு இன்னும் ஏற்பட வில்லை என்பதை நான் வெளிப்படையாகச் சொல்லி விட்டேன். அதைக்கேட்டு நகைத்துக் கொண்டே, கீழே யிருந்த பிராணிகளை நோக்கி ஏதோ கூறினார். அந்த அபாயகரமான பிராணிகள், அவர் கண்களைக் கூர்ந்து நோக்கி விட்டு அவர் தெரிவித்த குறிப்பை அறிந்து கொண்டதற்கு அடையாளமாக, வாலைக் குழைத்துக் கொண்டே அவ்விடத்தை விட்டு வெளியேறின. என் மனக் கலக்கமும், உடல் நடுக்கமும் படிப்படியே நீங்கின.

"என்னைப் பற்றி அறிந்து கொள்ள நீ ஏன் விரும்புகிறாய்!" என்று அவர் கேட்டார்.

"உலகத்திலேயே நீங்கள் ஓர் அலாதியான ஆத்மாவாக இருப்பதால்தான்!" என்று நான் விடையளித்தேன்.

"உலகத்தில் இருதயத்தை எட்டிப் பிடித்தவர்கள் இன்னும் சிலர் இருக்கின்றனர். அவர்கள் அதன் ஆழத்தைக் கண்டறிந்தவர்கள். அவர்களெல்லாம் இதற்கென்றே முயன்று பயன் கண்டவர்கள். ஆனால் நானோ, ஏதோ அகஸ்மாத்தாய் ஏற்பட்ட ஒரு விபத்தின் காரணமாக இதைக் கண்டறிய நேரிட்டது."

இந்த முன்னுரையுடன், அவர் தம் சொந்த வாழ்க்கை வரலாற்றைச் சுருக்கமாக எடுத்துரைத்தார். ஐ. ஸி. எஸ். பரீட்சையில் தேர்ச்சியடைந்து, பெரிய அதிகாரியாய் விளங்க வேண்டும் என்ற உத்தேசத்துடன், அவருடைய பெற்றோர் அவரை இங்கிலாந்திலுள்ள ஆக்ஸ்



## கர்னாடக சங்கீத சபை

சென்ற ஏப்ரல் பதினெட்டாம் தேதி இதழில் 'டில்லித் தபால்' என்ற தலைப்பின் கீழ் வந்துள்ள 'ஒரு நிருபரி'ன் கடிதத்தைப் படித்தேன். சபைக்காரர்களுக்கு அந்த நிருபர் அளித்துள்ள விண்ணப்பத்தைப் படித்து வியப்படைந்தேன்.

இந்தியக் குடியரசின் தலைநகராகிய டில்லியில் உள்ள தென்னிந்தியச் சிறுவர்களுக்கும், சிறுமிகளுக்கும், கர்னாடக சங்கீதத்தைக் கற்றுக் கொடுப்பதையும், தென்னாட்டில் சங்கீதத்தில் பிரசித்தி பெற்ற பற்பல வித்வான்களின் இன்னிசைக் கச்சேரிகளை ஏற்பாடு செய்வதையும், இளம் தென்னிந்திய வித்வான்களை வட இந்தியாவில் அறிமுகப்படுத்தி அவர்களையும் வடநாட்டில் பிராபல்ய மடையச் செய்வதையும் குறிக்கோளாய்க் கொண்டுள்ள டில்லியில் உள்ள "கர்னாடக சங்கீத சபை" சுமார் இருபது ஆண்டுகளாகத் தொண்டு செய்து வரும் ஓர் பதிவு செய்யப்பட்ட ஸ்தாபனம். இத்தகைய ஸ்தாபனம் தன்னுடைய சேவையில் என்றும் பின் வாங்காது மேலோங்கி நீடித்து வரப் பிரபல சங்கீத வித்வான்களும் பிரமுகர்களும், வட இந்தியர்களும், போஷகர்களாகவும், ஜீவித அங்கத்தினர்களாகவும் சேர்ந்து ஒத்துழைத்து வருகின்றனர்.

இம்மாதம் நாலாம் தேதி இச்சபையின் சார்பாக ஸ்ரீ அரியக்குடி ராமானுஜ அய்யங்கார் அவர்களின் கச்சேரி நடைபெற்றது. ஸ்ரீ பாப்பா வெங்கடராமய்யா அவர்களும் ஸ்ரீ பாலக்காடு மணி அய்யர் அவர்களும் பக்க வாத்தியம் வாசித்தனர். கச்சேரி மிகவும் நன்றாக இருந்தது. வழக்கம் போல், அனேகம் பிரமுகர்களும், பொது ஜனங்களும் வந்து, ஸ்ரீ அய்யங்கார் அவர்களின் இன்னிசையைப் பருகி நிர்வாகத்தினர்களையும் கௌரவித்தனர். தங்கள் நிருபர் எழுதியபடி ஏதும் சம்பவம் நிகழ்ந்ததாகத் தெரியவில்லை. அப்படி இருந்தாலும் தங்கள் நிருபர் எங்களிடம் சுட்டிக் காட்டி இருக்கலாம்.

இருபது வருடங்களுக்கு முன் ஏற்றி வைத்த தீபம் சுடர்விட்டு எரிய வேண்டும் என்கிற நோக்கத்துடன் தான், உணவும் உறக்கமுமின்றி இரவும் பகலும் உழைக்கின்றோம்.

வட இந்தியர்கள் மட்டுமல்ல, மேனாட்டார்கள் கூடக் கர்னாடக சங்கீதத்தில் ஆர்வம் கொண்டிருப்பார்களானால் அது 'கர்னாடக சங்கீத சபை'யின் முயற்சியினால்தான் என்றால் மிகையாகாது என்பதை மகிழ்ச்சியுடன் தெரிவித்துக் கொள்கிறேன்.

புது டில்லி — கே. எஸ். நாகராஜன்
27—4—54 (கர்னாடக சங்கீத சபை பொதுக் காரியதரிசி)

---

போர்டு சர்வ கலாசாலைக்கு அனுப்பினராம். இதைக் குறிப்பிட்டு, அவர் கூறியதாவது:—

என் பெற்றோர்களுக்கு நான் பெரிய ஏமாற்றம் அளிக்க நேர்ந்தது. அவர்கள் என்னை 'ஆக்ஸ்போர்டு'க்கு அனுப்பாமல், வேறு எங்கேயாவது அனுப்பி யிருக்க வேண்டும்! மிக உன்னத லட்சியங்களை எனக்கு 'ஆக்ஸ்போர்டு' எடுத்துக் காட்டி என்னை ஆட் கொண்டது. அழகை உபாசிக்கும் பக்தனாக நான் மாறி விட்டேன். 'நியூ காலேஜ்' என்ற கல்லூரியில் படிக்கும் போது, 'ஷெல்லி' என்ற ஆங்கிலக் கவிஞனின் நூல்களில் மெய்ம் மறந்து ஈடுபட்டேன். பட்டம் பதவி முதலியவற்றில் நாட்டம் செல்ல வில்லை. ஐ. ஸி. எஸ்.

பரீட்சையை அடியோடு மறந்து விட்டேன். கவிதை புனைவதிலும், 'யேட்ஸ்' போன்ற பிரபல கவிஞர்களிடம் உறவாடி மகிழ்வதிலும், காலம் கழித்தேன். கடைசியில் இந்தியாவுக்குத் திரும்பிய பொழுது, என் லட்சியத்திலேயே ஒரு மாறுதல் ஏற்பட்டது. 'கவிதையைப் படிப்பது, எழுதுவது, போதிப்பது-இதைவிட வாழ்க்கையில் உயர்ந்த லட்சியம் எதுவும் இருக்க முடியாது' என்ற முடிவுக்கு வந்தேன். இதனால் என்னை நம்பியிருந்த பலருக்கும் ஏமாற்றம் அளித்தேன் என்றாலும், என்னைப் பொறுத்த வரையில் நான் ஆனந்த மடைந்தேன். ஒரு கலாசாலையில் சாதாரண ஆசிரியர் வேலை எனக்குக் கிடைத்தது. அதனால் என் அந்தஸ்து அதிகம் உயர வழியேற்படவில்லை. ஆயினும், என் மாணவர்களுக்குக் கவிதையில் ஆர்வம் ஏற்படச் செய்துவந்தேன். 'யான் பெற்ற இன்பம் பெறுக இவ்வையகம்' என்றபடி நான் ரசித்த கவிதை நயங்களை எல்லாம், மற்றவர்களுக்கு உற்சாகத்தோடு எடுத்துரைத்து வந்தேன். மாணவர்கள் பரீட்சையில் தேர்வதற்கேற்ற வகையில் நான் போதிக்கத் தவறி விட்டேன். ஆயினும், எப்படியோ இதே வழியில் ஒருவாறு என் வாழ்நாள் முழுவதையும் கழித்து விட்டிருப்பேன். ஆனால், விதி வேறு விதமாகத் தீர்ப்பளித்து விட்டது.

என் வாழ்வில், முதன் முதலாக அப்போது தான் ஒரு பெண் குறுக்கிடலானாள். அவள் வேறு யாரோ அல்ல. என்னிடம் படிக்க வந்த மாணவிகளுள் ஒருத்திதான். அவள் அழகு என்னை ஆட்கொண்டது. அவள் தூய உள்ளம் என்னைக் கவர்ந்தது. சுருங்கச் சொன்னால், நடமாடும் கவிதையாக அவள் எனக்குக் காட்சியளித்தாள். அழகை மனக் கண் முன்னே கண்டு, ரசித்து உபாசித்து வந்த நான், எழிலின் வடிவை நேரில் பழகி நுகரும் வாய்ப்பைப் பெற்றேன். அவளும், அழகுக் கவிதை மீட்டும் நல்வீணையாக எனக்கு அமைந்தாள். என் புலமையை எல்லாம் அவளுக்கு ஊட்டினேன். நான் அறிந்த கவிதை நுட்பங்களை யெல்லாம் அவளுக்குக் கற்றுத் தந்தேன். இருவர் உள்ளமும் அழகுக் கலையில் தோய்ந்து நின்றன. கவிதைக் கோயிலில் ஒன்று கலந்தன; இரும்பும் காந்தமும் போல் இயைந்து வாழத் தொடங்கினோம். இருவரும் இணைந்து நின்று, இலக்கிய யாத்திரை செய்ய எண்ணினோம். எங்கள் ஆத்ம சங்கமத்தில் அமர காவியம் ஒன்றை உருவாக்கத் திட்டமிட்டோம்.

இதன் விளைவு, இவ்வளவு விபரீதத்தில் முடியும் என்று அப்போது எனக்குத் தெரியவில்லை. நான் என் கடமையை மறந்தேன். அவள் அன்பில் சொக்கி மனத்தைப் பறிகொடுத்துச் செயலற்றுக் கிடந்தேன். ஆனால், அவளோ தன் கடமையைச் செய்யத் தவறவில்லை. என்னைவிட, அவள் எவ்வளவோ தைரியசாலி! தன் தீர்மானத்தைப் பெற்றோருக்கு அறிவித்து, அவர்களுடைய சம்மதத்தையும் பெற முயன்றாள். அவள் பெற்றோர்களோ பெரிய அந்தஸ்தில் இருப்பவர்கள். பலன், அவள் எதிர்பார்த்ததற்கு மாறாக இருந்தது. காவியக் காதலர்கள் வாழ்வில் ஏற்படுவது போலவே, எங்கள் வாழ்க்கைப் பாதையிலும் எண்ணற்ற துன்ப முட்கள் தூவப்பட்டன. எங்களைப் பிரித்துவிடத் திட்டமிட்டனர். அவள் எங்கேயோ கண் காணாத ஓர் இடத்துக்கு அனுப்பப்பட்டு விட்டாள். அழகை உபாசித்த குற்றத்துக்காக, எனக்கும் தண்டனை விதிக்க அவர்கள் தவறவில்லை. என் உள்ளங் கவர்ந்த அன்புருவைப் பிரித்ததோடு, என் வாழ்க்கையையே சூனிய

மாக்கி விட்டார்கள். என் ஆசிரியர் தொழிலுக்கும் உலை வைத்து விட்டார்கள். கவிதை போதிக்கும் என் உத்தியோகத்தையும் பறித்து விட்டார்கள். என் வாழ்க்கை இருண்டு விட்டது. நிராசை மேகங்கள் என் உற்சாகத்தை மறைத்துவிட்டன.

இவ்வாறு கூறி வரும்போதே அவர் பழைய நிகழ்ச்சிகளில் லயித்து நின்றார். என் உள்ளமும் உருகிவிட்டது. ஆயினும், என் ஆவல் தணியவில்லை. "அவள் என்ன ஆனாள்!" என்று நான் குறுக்கிட்டுக் கேட்டேன்.

"எனக்குத் தெரியவில்லை. ஆனால் ஒன்று மட்டும் நிச்சயம். நாங்கள் சேர்ந்திருந்த நாட்களின் இன்பக் கனவுகளில் தன் உள்ளத்தைப் பிணைத்துக் கொண்டு, அவள் இன்னும் உயிர் வாழ்ந்து கொண்டுதான் இருப்பாள்."

இதைக் கூறும்போது அவர் கண்களில் லட்சியத் தெளிவு மிளிர்ந்தது. அவர் குரலில் எல்லையற்ற உறுதியின் நாதம் ஒலித்தது.

"அதற்குமேல் நீங்கள் என்ன செய்தீர்கள்!" என்று நான் கேள்வி கேட்டு. அவர் கதையை மேலும் சொல்லத் தூண்டினேன்.

"அதற்குமேல் என்ன இருக்கிறது! இருந்ததெல்லாம்தான் போய் விட்டதே! நிராதரவாக நான் சமூகத்தில் நின்றேன். எனக்கிருந்த வீடு வாசல், நிலபுலன் முதலிய சொத்துக்களை யெல்லாம் என் உடன் பிறந்த சகோதரர்களுக்கும் சகோதரிகளுக்கும் கொடுத்து விட்டேன். ஆனால் அவர்கள் அத்துடன் திருப்தி அடைந்ததாக எனக்குத் தெரியவில்லை. ஏனெனில், மறுபடியும் அவற்றைத் திருப்பிக் கேட்டு விடுவேனோ என்று அவர்கள் மனத்தில் ஒருவித அச்சம் இருந்து கொண்டிருப்பதாகத் தோன்றியது.

"இதற்குமேல் எனக்குப் பொறுக்கவில்லை. அன்பையும் தியாகத்தையும் மதிக்காத மனிதர் உறவே வேண்டாம் என்ற தீர்மானத்துக்கு வந்தேன். உள்ளன்புக்கு இந்தச் சமூகம் இடமளிக்காது என்பதை உணர்ந்தேன். உண்மைக் காதல், கவிதை, மற்ற எழிற் கலைகள் யாவும், காவியத்தில்தான் அமரத்துவம் பெற்று விளங்க முடியும் என்பதைத் தெளிந்தேன். எல்லாவற்றையும் துறந்து இயற்கைச் சூழலில் அழகுத் தெய்வத்தின் மடியில் சுதந்திரத்தோடு வாழப் புறப்பட்டு விட்டேன். அழகிய இந்தக் காட்டில் ஆனந்தமாக இருந்து வருகிறேன். இவ்வளவுதான் என்னைப் பற்றிய வரலாறு. ஆனால் ஒன்று. நான் என் சொத்துக்களையும் உற்றார் உறவினரையும் துறந்துவிட்டு வந்தேனே யொழிய மூன்று நூல்களை மட்டும் என்னால் துறக்க முடியவில்லை. அவற்றை என்னுடன் கொண்டு வந்தேன். 'ஷேக்ஸ்பியர்,' 'ஷெல்லி,' 'கீட்ஸ்' ஆகிய மூவரின் காவியங்களே அவை!" என்று கூறி நிறுத்தினார்.

என் மனம் அமைதியில் ஆழ்ந்தது. காட்டில் வேட்டையாடச் செல்லும்போது, காவிய ரசனையின் பெருமையை உணர்ந்தறியும் வாய்ப்புக் கிட்டியதை எண்ணி மகிழ்ந்தேன்.

அவர் தொடர்ந்து பேசினார். தாம் எல்லாச் செல்வங்களையும் குறைவறப் பெற்றிருப்பதாக அவர் கூறினார். மனிதர் தவிர, மற்ற எல்லாப் பிராணிகளும் தம்மிடம் அன்பு செலுத்தி வருவதாக அவர் விளக்கினார். அழகிய நீல வானும், பச்சை மாமலைகளும், இயற்கைக் கீதம் பாடிக் கொண்டே ஓடும் நதிகளும், மரங்கள் அடர்ந்து மண் மடந்தைக்கு ஆடை பணிவித்தாற்போல்









விளங்கும் வளம் செறிந்த காடுகளும் அவருடைய விலையுயர்ந்த சொத்துக்களாக அமைந்தன. ஆனால், மனிதரோடு நட்புக்கொள்ளாமல் அதுவரை வாழ்ந்து வந்தார். ஏனெனில், இயற்கை யழகை உணர்ந்து, அது தரும் இன்பப் போதையில் தன்னை மறக்கும் ஆற்றல் வாய்க்கப்பெற்றவர்கள், மனித சமுதாயத்தில் அதிகம் பேர் இல்லை என்பது அவர் கண்ட அனுபவம். அத்தகைய ஓரே ஆத்மாவைத்தான் அவரால் சந்திக்க முடிந்தது. அந்த அழகுத் தெய்வத்தை — தூய்மையின் திருவுருவை என்றும் மறக்காமல் வாழ நினைத்தார். தம் மானசிகக் கோயிலில், அவளை உபாசித்துக் கொண்டு, அமைதிச் செல்வத்தைப் பெற்று, இயற்கைத் தாயின் இதயத்தில் வாழ்ந்து, எல்லா உயிர்களுக்கும் அன்புத் தொண்டு செய்து கொண்டு அருளொளியைப் பரப்பி வந்தார்.

நான் வந்த காரியம் முடிந்ததை உணர்ந்தேன். அவரிடம் விடைபெற்றுக் கொள்வதற்கு முன், "உங்களுக்கு ஏதாவது வேண்டுமா!" என்று வாஞ்சையோடு கேட்டேன்.

"'ஷேக்ஸ்பியர்' 'ஷெல்லி' ஆகிய இரு காவியங்களையும் ஒரு கரடி தனக்குப் பயனற்றது என்ற காரணத்தாலோ, என்னவோ கிழித்தெறிந்து விட்டது!" என்றார் அவர்.

நான் வந்த வேலை முடிந்து நகரத்துக்குச் சென்றவுடனே, அந்த நூல்கள் இரண்டையும் வாங்கி அனுப்புவதாக வாக்களித்தேன்.

"அந்த அற்புத காவியப் பொக்கிஷங்களைத் திறக்கும்போதெல்லாம், உங்களை நான் நினைத்துக் கொள்வேன்!" என்று கூறி எனக்கு விடையளித்தார்.

அதற்குப் பிறகு, பல தடவைகள் நான் அவரைப் பார்த்து அளவளாவினேன். அவர் எப்போதும் இன்பத்தின் வடிவாகவும், இளமையின் ஊற்றாகவும் விளங்கினார். மனவாட்டமோ உடல்வாட்டமோ ஒரு சிறிதும் காணமுடியவில்லை.

ஒரு நாள் அவர் வாழ்ந்து வந்த மரத்துக் கருகே நான் போய்க் கொண்டிருந்த பொழுது சிலர் அங்குள்ள மரங்களை வெட்டி வீழ்த்தி வந்ததைக் கண்டேன். அவர்களை விசாரித்ததில் அங்குள்ள மரங்கள் எல்லாம் விற்கப்பட்டு விட்டதால் அவற்றைவெட்டுவதற்கு ஏற்பாடு செய்திருப்பதாகக் கூறினர்கள். அந்த விசித்திர மனிதர் வாழ்ந்து வந்த மரமும் அவற்றுள் ஒன்றாக இருந்தது. அந்த மரத்தை மட்டும் வெட்ட வேண்டாம் என்று அவர்களைக் கேட்டுக்கொண்டேன்.

"அது எப்படி முடியும்! ஒரு மரம் இருந்தால்கூட, அங்கே எந்தப் பயிரையும் விளைவிக்க முடியாதே!" என்று அவர்கள் மறுத்து விட்டார்கள். அந்த மரத்தை விட்டு வைப்பதற்கு, தகுந்த பணம் தருவதாகவும் சொன்னேன். அவர்கள் ஒத்துவரவில்லை. அழகுப் பித்தரான என் நண்பருக்கு அவர் அடைந்துள்ள அந்த இருப்பிடத்தை யாவது காப்பாற்றித் தரலாம் என்று நான் செய்த முயற்சி வீணாயிற்று.

அதற்குப் பின் ஓர் அற்புத நிகழ்ச்சி நடைபெற்றது. மறு நாள் மாலை, அந்த மரத்தை வெட்ட வேண்டுமென்று தீர்மானித்துக்கொண்டு படுத்தவர்களுள் ஒருவன், அன்றிரவே பாம்பு கடித்து இறந்தான். அவனுடன் சேர்ந்து அம் மரத்தை வெட்ட ஒப்புக்கொண்ட மற்றொருவனும், திடீரென்று அகால மரணத்துக் குள்ளானான். இதன் விளைவாக அந்த மரத்தை வெட்ட ஒருவரும் முன் வரவில்லை. ஏதோ ஒரு கடவுள் சக்தி அந்த மரத்தைக் காப்பதாக எண்ணி, அதைத் தீண்டவும் பயந்தனர் ஜனங்கள்.

நான் புலி வேட்டையை முடித்து விட்டேன். புலியைச் சுட்டுக் கொன்றதும், அந்தப் பிரதேசத்தில், என் வேலை பூர்த்தியாயிற்று. அங்கிருந்த எல்லோரிடமும் விடைபெற்றுக் கொண்டு, அந்தக் கிராமத்தை விட்டுக் கிளம்பினேன். முக்கியமாக, என் நண்பர் 'பறவை மனிதரி'டம் பிரியா விடைபெற்றுப் பிரிந்தேன். ஒருவரை ஒருவர் மறக்க முடியாத அளவு எங்களுக்கிடையே நட்பு வளர்ந்து விட்டதை, அப்போதுதான் அறிந்தோம். நாங்கள் பயின்ற காவிய மேற்கோள்களை எங்கள் பிரிவுபசாரத்தின் போது, ஒருவருக்கொருவர் தாராளமாகப் பரிமாறிக் கொண்டோம்.

தம் நட்புக்கு அறிகுறியாக அவர் ஓர் அழகிய காட்டு மலரை எனக்கு அன்பளிப்பாகத் தந்தார். தன்னலத்துக்கு இரையாகாமல் சேவை உணர்ச்சியோடு நான் வாழவேண்டுமென்றும், அதற்கு அம்மலர் ஓர் அடையாளமாக இருக்குமென்றும் கூறி என்னை வாழ்த்தி வழி அனுப்பினர்.

நான் நகரத்துக்கு வந்ததும், அவர் கேட்ட இரண்டு நூல்களையும் வாங்கிவிட்டேன். ஆயினும் அவற்றை நான் அவருக்கு அனுப்பவில்லை. காரணம், அன்றையதினமே அந்தக் கிராமத்தாரிட மிருந்து, கீழ்க் கண்ட கடிதம் வந்திருந்தது தான்.

"தங்கள் நண்பர் வாழ்ந்திருந்தமரம், தானாகவே திடீரென்று நேற்றைய இரவு தீப்பிடித்துக் கொண்டு எரியத் தொடங்கியது. எங்கள் கண்கள் முன்னாலேயே, அந்தத் தீயிலிருந்து ஒரு ஆணும் ஒரு பெண்ணும், தம் கைகளைக் கோத்துக் கொண்டு, உல்லாசமாக வெளி வந்து, மலைத் தொடர்களை நோக்கி நடந்து சென்றனர். நாங்களெல்லாம் இமைக்க கண்மூடாமல், பிரமிப் படைந்து நிற்கையில், அவர்கள் சின்னஞ் சிறு நட்சத்திரங்கள் போன்ற ஒளி உருவம் பெற்று, ஆகாய மண்டலத்தில் ஒன்று கலந்தனர்."





# அவன் கடமை

வேம்பு கிருஷ்ணமூர்த்தி

அவன் திகைத்து விட்டான்!

நாதஸ்வரக்காரனின் கைத்திறன் உருவாக்கிய 'கேதார ராகம்' அவனுக்கு நரக வேதனையை அளித்தது! ஊஞ்சலைச் சுற்றி நின்ற பெண்கள் 'களீர், களீர்' என்று களிப்புடன் சிரித்த ஒலி, கடூரமாக இருந்தது!

"கன்னூஞ்சல் ஆ...டி...ருந்தாள். காஞ்சன மாலை மணமகிழ்ந்தாள்..." மூதிர்ந்த சுமங்கலி ஒருத்தி அர்த்த பாவங்களையும், ராக தாளக் கட்டுப்பாட்டையும் உதறி விட்டுப் பாடத் தொடங்கினாள்.

"மேல் பஞ்சமத்தையும், கீழ் ஷட்ஜமத்தையும், ஏக காலத்தில் உறவாட விட்டு அப்படியே நாதஸ்வரத்தில் இசைத்தான், நாயனக்காரன்.

அவனுக்கு எழுந்து ஓடி விடலாமா என்று ஆத்திரம் பற்றிக் கொண்டு வந்தது!

புசுபுசுவென்று புதுப் பட்டுப் புடவையுடன் தன்னருகில் வந்து ஊஞ்சலில் அமர்ந்திருக்கும் அந்தப் பெண்ணை அதாவது சில மணி நேரத்தில் தன் மனைவியாகப் போகிறவளைப் பார்த்தான். இனம் தெரியாத வேதனை இருதயத்தை வாட்டியது!

கண்கள் சிவக்கப் பொறுமை இழந்து தன் அக்காளைப் பார்த்தான்.

மௌன நாடகத்தின் சிகரமாக அக்காள் அலமுவின் கெஞ்சும் பார்வை அவனை அடக்கி வைத்தது!

பந்தலில் கட்டியிருந்த வாழைத்தாரையும், மேல் விதானத்தை அலங்கரித்த வெள்ளைத் துணியையும் வெறித்துப் பார்த்துக் கொண்டிருந்தான் ரங்கராஜன்! தன் வாழ்க்கையின் முக்கிய சம்பவத்தை—தான் கட்டிய மனக் கோட்டையை—அவனுடைய இடிந்த மனம் துழாவிக் கொண்டிருந்தது!

•• •• ••

பெற்ற தாய் தந்தையரை இழந்த ரங்கராஜன், அக்கா அலமுவின் அன்பிலும், அத்திம்பேரின் ஆதரவிலும் ஆளாகி விட்டான். வாழ்க்கையுடன் மல்யுத்தம் புரியும் மத்யதர வகுப்பினளான அலமு, தன் இரு குழந்தைகளுடன் தம்பி ரங்கராஜனையும் பராமரித்து வந்தாள். ஞுடிகையாகப் படித்துத் தேறிய ரங்கராஜன், மாதம் இருநூறு ரூபாய் சம்பாதிக்கத் தொடங்கினான்.

பெரிய மிராசுதார் ஏகாம்பரய்யர், தன் ஏக புத்திரி பத்மினியை ரங்கராஜனுக்கு மணம் செய்துகொடுக்க முன்வந்தார். பெண் பார்க்க வென்று புனாவிலிருந்த ரங்கராஜன் பூங்குடிக்கு ஒரு ஞாயிற்றுக்கிழமை வந்து சேர்ந்தான். அவன் படியேறியதுமே ராகு காலம் வந்து விட்டது! விளக்கு வைக்கும் நேரம் ஆகி விட்டது. ஏகாம்பரய்யரின் பலமான உபசரிப்பில் திணறினான் ரங்கு. கூடத்தில் 'பவர் லைட்'டை ஏற்றி வைத்துப் பட்டுப் பாயைக் கொண்டு போட்டார்கள். முதல் அனுபவமாகையால், மிகவும் சங்கோசத்துடன் எங்கோ பார்த்துக் கொண்டிருந்த ரங்கராஜன் காலடியில் நமஸ்கரித்து விட்டு எழுந்த பத்மினியைக் கடைக்கண்ணால் ஒரு முறை கவனித்தான். மங்கிய விளக்கின் வெளிச்சத்தில், அவள் முகம் கவர்ச்சியாக இருந்தது. பதுமை போல் நின்ற அவள்

தோற்றம் அவனுக்குப் பிடித்து விட்டது. திருப்தியுடன் விடைபெற்றுச் சென்றான்!

வரதக்ஷிணை, சீர் வகைகள் சிறப்பாக அமைந்துவிட்ட திருப்தி அலமுவுக்கு! நல்ல குடும்பத்தில் சம்பந்தம் என்ற பரம திருப்தி அவன் அத்திம்பேருக்கு. அடுத்த முகூர்த்தத்திலேயே கல்யாணம் நடக்க ஏற்பாடாகி விட்டது. பூனாவிலிருந்து அவர்கள் வந்து சேர்ந்தார்கள். ஜானவாஸ ஊர்வலம் கோலாகலமாக நடந்தது. வருங்கால மண வாழ்க்கையை இனிய கற்பனைகளால் உருவாக்கிப் பூரித்து மகிழ்ந்தான் ரங்கராஜன்.

இருக்கு வெளுப்பதற்கு முன் பரதேசக் கோலமும் பரிகாசச் சிரிப்பும் நிறைந்த பழைய சம்பிரதாயங்களும் நடந்து விட்டன. கன்னூஞ்சலில் அமர்ந்து, கன்னியின் வரவை எதிர் பார்த்து ஆவலுடன் காத்துக்கொண்டிருந்தான் ரங்கராஜன்.

பெண்கள் புடைசூழ, இடது காலை இழுத்து இழுத்து வைத்து நடந்து வந்தாள் பத்மினி. ரங்கராஜனுக்குத் 'திக்'கென்று நெஞ்சில் வேதனை மூண்டது!

'கால் ஊனத்தை மறைக்கவென்றே அன்று ராகுகாலம் என்று சொல்லி, இருட்டில்...'

வகையாகத் தான் ஏமாந்து விட்டதை எண்ணி மனம் வெகுண்டான் ரங்கராஜன்.

கண்ணுக்கு நன்றாக இருக்கிறாள் என்றாலும், இப்படி இழுத்து இழுத்து நடக்கும் கண்ணாட்டி! "கல்யாணமே வேண்டாம் என்று சொல்லி, எங்காவது ஓடிவிடலாமா?" என்று தோன்றி விட்டது அவனுக்கு.

பூரண சம்மதத்துடன் இணங்கி விட்டு இப்பொழுது திடீரென்று மறுத்தால்...? அத்திம்பேர் சத்தியம் தவறாதவர். அவர் தான் அதற்கு என்ன சொல்வார்? கிராமத்திலும் பெரிய மிராசுதாரின் பக்கமே ஆதரவிருக்கும். எனவே, அவன் என்ன செய்ய முடியும்?

சிந்தனையில் குழம்பிய ரங்கராஜனுக்காக எந்த நிகழ்ச்சியும் நின்றுவிட வில்லை.

சுமங்கலிப் பெண்கள் பாலும் பழமும் அளித்துத்தீபமும் தண்ணீரும் ஏந்தித்திருஷ்டி சுற்றினார்கள். சின்னஞ் சிறுமிகள் புதுத் தம்பதிகளை நாரினால் முடி போட்டு இணைத்தார்கள். கெட்டி மேளம் முழங்கியது! "வலது கையைப் பிடித்துக் கொள்ளு! வலது காலைப் படிமீது வை!" என்று புரோகிதர்கள் உரக்கக் கட்டளை இட்டனர். இயந்திரம் போல் அப்படியே செய்து விட்டான் ரங்கராஜன்! சிந்தனைக்கு எட்டாத சக்தியால் ஊக்கப்பட்டு ஹோமப் புகை கண்களை மறைக்கப் பத்மினியின் கழுத்தில் மூன்று முடியும் போட்டு விட்டான்.

சம்பந்திகளுக்கு விடப்பட்ட தனி ஜாகைக்கு வந்த பின்பு, "பெண்ணுக்கு ஒரு கால் சற்று ஊனம் போலிருக்கிறதே?" என்று அலமு உள்ளக் குமுறலுடன் ஆரம்பித்தாள்.

ரங்கராஜன் தன் ஏமாற்றத்தை வெளியிடத் துடித்தான். ஆனால் அவன் பேசவே சந்தர்ப்பம் இல்லாமற் போய் விட்டது.

"தாலி கட்டியாகி விட்டது! இப்பொழுது வீண் குழப்பம் எதற்கு? எதுவும் ஆண்டவன் இச்சைப்படியே நடக்கிறது!" என்று அத்திம்பேர் அழுத்தமாகச் சொல்லிவிட்ட பிறகு அவனுக்குப் பதில் பேசத் துணிவில்லை! நல்ல வேளையாக நம் நண்பர்கள் யாரும் வராமல் இருந்தார்களே என்ற ஒரே ஆறுதலுடன் வளைய வந்தான் ரங்கராஜன்.

"நலங்குக்கு வரமாட்டேன் என்று பிடிவாதமாக மறுத்துவிட்டானே மாப்பிள்ளை!" என்று சொல்லிய பெண் வீட்டார், ரகசியமாக அவனுக்குக் கோபக்காரன், முரட்டு மாப்பிள்ளை என்ற பட்டங்களைச் சூட்டினார்கள். மறுக்க முடியாத ஊர்வலச் சடங்கு முடிந்ததும், 'சிறையிலிருந்து விடுபட்டது போல் "அப்பாடா" என்று பெருமூச்சு விட்டான் ரங்கராஜன்.

ஒரு சண்டை சச்சரவு இல்லாமல் சுமுகமாக விவாகம் நடந்து முடிந்தது என்ற திருப்தியுடன் சம்பந்திகளை வழியனுப்பினார் மிராசுதார் ஏகாம்பரய்யர்.

* * *

பூனாவிலிருந்து, உத்தியோக உயர்வுடன் ரங்கராஜனைப் பம்பாய்க்கு மாற்றி விட்டார்கள். கல்யாணம் நடந்து வருஷம் ஒன்



றுகியும், இடிபட்ட அவன் மனம் கிமிர்ந்து எழும்பவில்லை! விடு கிடைக்கவில்லை என்ற ஒரு அஸ்திரத்தால் மனைவியை நெருங்க விடாமல் தடுத்து வந்தான்.

ரங்கராஜனுக்கு அத்யந்த நண்பன் 'டைப்பிஸ்ட்' ராமஸ்வாமி. அவனுக்கு முப்பது வயது இருக்கும். மிகவும் மெலிந்த உடல் அவனுக்கு. மிக்க உற்சாகியான ராமஸ்வாமி இருக்கும் இடத்தில் சிரிப்பும் கேலியுமாகத் தான் இருக்கும். ஒரு வாரமாக உடல்நலக் குறைவால் அவன் ஆபீசுக்கு வரவில்லை.

அன்று ஆபீஸுக்குள் நுழையும்போதே "ராமஸ்வாமிக்கு வலது கால் திடீரென்று சுவாதீன மற்று விட்டதாம்" என்ற விஷயம், ரங்கராஜனைத் திடுக்கிடச் செய்தது! பகல் பொழுதைத் தள்ளிவிட்டு நண்பனைப் பார்க்கப் புறப்பட்டான் அவன்.

நண்பனின் வீட்டுக்கு விரைந்து வந்த ரங்கராஜன், வாசற்படியில் சிறிது தயங்கினான். முன் அறையில் ஒரு புறமாகப் போட்டிருந்த கட்டிலில் ராமஸ்வாமி படுத்திருந்தான். அவன் மனைவி மங்களம் மெல்லிய தன் கரங்களால் அவனைத் தாங்கிப் பிடித்துத் தூக்கி நடத்திச் சென்றாள். காலைத் தாங்கித் தாங்கி ஊன்றி நடந்து பக்கத்திலிருந்த மாற்று உடைகளை அணிந்து கொண்டான் ராமஸ்வாமி. மீண்டும் மனைவியின் உதவியுடன் படுக்கையில் சாய்ந்த போதுதான் வெளியில் தயங்கி நின்ற ரங்கராஜனைக் கவனித்தான் ராமஸ்வாமி. அவனை வரவேற்று, "ரங்கு!...... எனக்கு இப்படி வந்துவிட்டதேடா!" என்று கண்ணீர் பெருகக் கூறினான். நண்பனின் கோலத்தைக் கண்டு துன்ப மேலீட்டால் பேசத் தெரியாமல் தவித்தான் ரங்கராஜன்.



"எதற்கு இப்படி அலட்டிக் கொள்கிறீர்கள்? தானே சரியாகி விடும்" என்று கனிவுடன் கூறினாள் ராமஸ்வாமியின் மனைவி மங்களம். அது மட்டும் அல்ல. அவனுக்குச் செய்ய வேண்டிய பணிவிடைகளை முகம் கோணாமல் அலுத்துச் சலித்துக் கொள்ளாமல் செய்யவும் செய்தாள்.

அங்கிருந்து தன் அறைக்குத் திரும்பிய ரங்கராஜனுக்குப் பிரமிப்பாக இருந்தது!

ஒரு வாரமாகப் படுக்கையில் கிடக்கும் ராமஸ்வாமியின் தோற்றமும், அவன் காலை இழுத்து வைக்கும் விதமும், மங்களத்தின் கருணை ததும்பும் முகவிலாசமும் தோன்றி அவனை 'ஆத்ம விசாரணைக்கு' உட்படுத்தின. மென்மையான உள்ளம் படைத்த மங்களம், கணவனுக்குக் 'கால் நடக்க முடியாது' என்று தெரிந்த பின்பும், அன்பும் அமைதியுமாகப் பணிவிடை செய்கிறாள்! அவள் முகத்தில் மலர்ச்சி சிறிதும் குன்றவில்லை!

ஆனால் திட சித்தம் படைத்த ஆண் மகனான அவன், தான்

---

**Sri Vivekananda High School Times Annual 1954**

ஞான தீபமாகிய ஸ்ரீ ராமகிருஷ்ண பரமஹம்ஸரது ஒப்பற்ற உபதேசங்களும் அவரது வாழ்க்கை வரலாறுகளும் யாவரும் அறிந்தவையே. தமிழர் வாழும் கண்ணற்ற தீவாகிய பீஜித் தீவிலும் அம்மகா புருஷரின் அருள் ஒளி பரவியிருக்கிறது. அத்தீவில் உள்ள விவேகானந்தா உயர்நிலைப் பள்ளியின் வருஷ மலரில் ஆங்கிலம், பீஜி மொழி, ஹிந்தி, தமிழ் முதலிய பல மொழிகளில் கட்டுரைகள் வெளி வந்திருக்கின்றன.

Published by Sri Vivekananda High School, Nadi, Fiji. Prize: 7/6 d.

## பஞ்சாயத்துச் சட்ட விவரம்

பண்டைய நாட்களிலே கிராமப் பஞ்சாயத்துகள் மூலமே நம் நாடு ஆளப்பட்டு வந்திருக்கிறது என்று சரித்திரம் கூறுகிறது. இந்தப் பழைய முறையை நம் அரசாங்கம், இன்றையச் சூழ்நிலைக்குத் தக்கவாறு சட்ட திட்டங்கள் வகுத்து அமுலுக்குக் கொண்டு வந்திருக்கிறது. இதற்கு '1950-ம் வருஷத்திய சென்னை கிராமப் பஞ்சாயத்துச் சட்டம்' என்று பெயர். இந்தச் சட்ட விவரங்கள் அனைவரும் எளிதில் புரிந்து கொள்ளும் வகையில் எளிய தமிழில் தரப்பட்டிருக்கிறது. தயாரித்தவர்: முல்லை முத்தையா; கிடைக்குமிடம்: 'நகரசபை' காரியாலயம், சென்னை – 2; விலை ரூ. 1—8—0.

---



சென்ற ஓராண்டாகச் சிறந்த முறையில் வெளியாகி வரும் ''உமா'' மாத சஞ்சிகையின் இரண்டாம் ஆண்டு ஆரம்ப விழா மே முதல் தேதி உமா இல்லத்தில் சிற்றுண்டி விருந்து, இசைவிருந்து முதலிய வைபவங்களுடன் இனிது நடைபெற்றது. விழாவுக்குத் தலைமை வகித்த கல்கி ஆசிரியர் பத்திரிகை நடத்துவதில் உள்ள சிரமங்களை எடுத்துக் கூறி ''உமா'' பத்திரிகை சிறந்த இலட்சியங்களுடனும் உன்னதமான அம்சங்களுடனும் நல்ல முறையில் வெளியாகி வருவதைப் பாராட்டினார். 'உமா'வின் ஆசிரியர் திரு உமாபதி அவர்களுக்கும், அவருக்குத் துணை புரியும் குழுவினருக்கும் திரு ம. பொ. சிவஞான கிராமணியார் வாழ்த்துக் கூறினார். திரு ம. பொ. சிவஞான கிராமணியார், திரு உமாபதி ஆகியவர்கள் பேசுவதையும், விழாவுக்கு வந்திருந்த அன்பர்கள் சிலர் மலர்ந்த முகத்துடன் விளங்குவதையும் படத்தில் காணலாம்.

கைப்பிடித்த பெண்ணுக்குக் கால் ஊனம் என்று தெரிந்ததும் அவளைத் திரும்பிப் பார்க்கவும் அஞ்சி, ஓடி வந்து விட்டானே!

இது தான் ஆண்மகனின் லட்சணமா? கடமையா? தன் மனோபலவீனத்தை எண்ணித் தன்னைத்தானே நொந்துகொண்டு நடந்தான்.

அறைக்குள் நுழைந்ததும் ஒரு கடிதம் அவனுக்கு வரவேற்புக்கூறியது. அவசர அவசரமாக உறையைக்கிழித்துப் படிக்கலானான்.

அன்புள்ள ரங்கு!

உனக்கு ஒரு சந்தோஷ சமாசாரம்! மனத்தில் ஏற்படும் சிறு சந்தேகம் வாழ்வையே குலைக்கும் மாபெரும் தீயாகி விடுகிறது! சிறு விஷயங்கள் விகல ரூபம் எடுத்து விடுகின்றன! சென்ற வாரம் உன்னுடைய மாமனார் இங்கு வந்தார்! ''இரண்டு வருஷமாகப் போகிறது, கல்யாணமான பெண்ணை அழைத்துக் கொள்ளவில்லை என்று ஊரெல்லாம் பூரளியாகி விட்டது. என்ன காரணம்?'' என்று கேட்டார். நான் சொன்ன பதில் அவரை வருத்தத்தில் ஆழ்த்தியது. அவர் அதற்குச் சொன்ன பதில் என்னை ஆச்சரியத்தில் ஆழ்த்தியது.

நீ பெண் பார்க்கச் சென்ற சமயம் நல்ல கோடைக்காலம் அல்லவா? உஷ்ணம் தாங்காமல் பத்மினிக்கு முழங்கால்முட்டில் சிரங்கு வந்து விட்டதாம்! நடக்க முடியாமல் மாதக் கணக்கில் அவதிப்பட்டாளாம்! இந்தச் சின்ன விஷயம் கல்யாண சந்தடியில் ஒருவருக்கும் பொருட்டாகப் படவில்லை! கால் ஊனமாக இருந்தால் 'கசமுச'வென்று, நமக்குத் தெரிந்து விட்டிருக்கும். அற்பச் சிரங்கு இத்தனை நாட்களும் ஆனந்தமான உன் வாழ்வைக் குலைத்து விட்டது! வளர்த்துவானேன்? நீ உடனே பூங்குடிக்குச் சென்று, உன் மனைவியை அழைத்து வருகிறாயா? அல்லது நான் கொண்டு வந்து விடச் சொல்லட்டுமா?

உன் அன்புள்ள அக்கா - அலமு.

கடிதத்தைப் படித்த ரங்கராஜனுக்கு இனம் தெரியாத பரபரப்பு ஏற்பட்டது. மனக் கசப்பை மூடி மறைத்து விட்டுத் தன் கடமையை நிறைவேற்றச் சிறிது முன்புதான் அவன் தீர்மானித்தான்! திடமற்ற ஆண் மனத்தைச் சோதிக்க ஆண்டவனுக்கே இஷ்டமில்லை போலும்! இல்லாவிட்டால், அக் கடிதம் அந்தச் சமயத்தில் வருவானேன்?

தன் மனத்தில் ஏற்பட்டிருந்த மூடத்தைப் போக்கிய ராமஸ்வாமியின் மூடம் தீரவில்லையே என்ற ஏக்கத்தையும் அவனுக்குப் பகவான் வைக்கவில்லை. பத்மினியை அழைத்து வருவதற்காக அவன் லீவு வாங்கிக் கொண்டு புறப்பட்ட அன்று, நண்பன் ராமஸ்வாமி உடல் பூரண குணம் பெற்று அவனை வழி அனுப்ப வந்திருந்தான். எனவே, இரண்டத்தனை மகிழ்ச்சியுடன் ரங்கராஜன் பூங்குடியை நோக்கிப் பயணமானான்.

# தாய்மார்களே !

**உங்கள் குழந்தை டூமெக்ஸ் பால் உணவைப் பெரிதும் விரும்பும்.**









வெளி நாடுகளில் வெகுவாகப் போற்றப்படும் டூமெக்ஸ் பால் உணவு இந்திய சீதோஷ்ண நிலைக்கென தனியாகத் தயாரிக்கப்பட்டு இந்தியாவிலெங்கும் இப்போது விற்பனையாகிவருகிறது. புளிப்புத் தட்டாமல் எளிதில் ஜீரணிக்கப்படுவதால் டூமெக்ஸ் பால் உணவு குழந்தைகளை நாள் முழுவதும் ஆனந்தத்துடனும், குதூகலத்துடனும் இருக்கச் செய்கிறது.

டூமெக்ஸ் பால் உணவு எளிதில் தண்ணீரில் கரைந்து ருசிகரமான பாலாகி உடனே குழந்தைகளுக்கு ஊட்டலாம். இப்படிச் செய்வதனால் உங்கள் நேரம் வீணாகாமலும் குழந்தைகளுக்கு அதி சீக்கிரத்திலும் உணவு தயாரிக்க ஏதுவாகிறது.

மேலும் டூமெக்ஸ் பால் உணவு யாதொரு அபாயமற்றது ஏனெனில் டூமெக்ஸ் பால் உணவு "டூபர் கொலின் டெஸ்டெட்" பசுக்களின் மடியின் நிறைந்த பாலினின்று தயார் செய்யப்பட்டது. டி.டி. பால்தான் குழந்தைகளுக்கு மிகச்சிறந்ததும், சுத்தமானதுமென்று உங்கள் டாக்டர் சொல்லுவார். இத்தகைய அப்பழுக்கற்ற உணவுப் பால் சிக்கனச் செலவில் உங்களுக்குக் கிடைக்கிறது.

ஆகையால் இன்றே டூமெக்ஸ் பால் உணவை வாங்கி உங்கள் குழந்தைகளை ஆரோக்கியமும், ஆனந்தமும் அடையச் செய்யுங்கள். டூமெக்ஸ் பால் உணவு எங்கும் எளிதில் கிடைக்கிறது.







இதுவே டூமெக்ஸ் பாலூட்டும் புட்டியைப் பெற வழி: டூமெக்ஸ் பால் உணவு டின்களிலுள்ள கூபன்களைச் சேருங்கள். இப்படி மூன்று கூபன் சேர்ந்த பின் அவைகளை டூமெக்ஸ் லிமிடெட், பேபி புட் டிபார்ட்மெண்ட், போஸ்ட் பாக்ஸ் 639, பம்பாய்-1. இவ்விலாசத்திற்கு தபால் மூலம் அனுப்பவும். இவ்விதம் அனுப்பிய பின் மறு தபாலிலேயே உங்களுக்கு ஒரு டூமெக்ஸ் பாலூட்டும் புட்டி அனுப்பப்படும். இப்புட்டி உறுதியானது. மற்றும் சுகாதார விதிகளை அனுசரித்தது.

**உங்கள் குழந்தைகளுக்கு டூமெக்ஸ் பால் உணவைக் கொடுத்து அவர்களின் வளர்ச்சியைக் கவனியுங்கள்.**

# யோகாசனச் சிகிச்சை

வி. என். குமாரசாமி

## 21. ஆஸ்துமாவும் தற்கால சிகிச்சையும்

ஆஸ்துமாவுக்கு மருந்தில்லையென்றால் தற்சமயம் எத்தனையோ மருந்துகளைச் செய்து கொண்டு தானே இருக்கிறார்கள்! ஏதாவது குணம் இல்லாமலா இத்தனை மருந்துகள் விற்பனையாகும்! மக்கள்தான் வாங்குவார்களா! எத்தனையோ ஆஸ்துமா வியாதியஸ்தர்களை அவஸ்தைப் படுவதிலிருந்து இந்த மருந்துகள் தடுத்து மீட்டு வருகிறதல்லவா! ஏதோ பூரணமாய்க் குணமாகிறதோ இல்லையோ, நோயாளி அந்த அவஸ்தையிலிருந்து விடுபடத்தானே செய்கிறான். பின்பு எப்பொழுதாவது ஒரு வருடம் பொறுத்தோ இரண்டு வருடம் பொறுத்தோ, ஆஸ்துமா வந்தாலும் மருந்துகள் ஓரளவுக்குக் குணம் செய்கிறதல்லவா என்று கேட்கலாம்.

ஆம், ஓரளவு குணம் செய்கிறதென்னமோ உண்மைதான். எல்லாவித வைத்தியங்களிலும் எத்தனையோ வித மருந்துகள் எத்தனையோ வித சிகிச்சை முறைகள் இருக்கின்றன. இம்மருந்துகளைப் பெற்றுக் குணம் அடைவதென்னமோ அவரவர்களின் பொருளாதார நிலையைப் பொறுத்திருக்கிறது. செல்வவந்தர்கள் நல்ல உயர்ந்த நவீன மருந்துகளையெல்லாம் உபயோகித்துத் தற்கால குணமடைய ஏது உண்டு. ஆனால் நடுத்தரக் குடும்பஸ்தர்கள் ஏழைக் குடும்பஸ்தர்கள் இந்நோய்க்காக உயர்ந்த நவீன மருந்துகளை வாங்கவோ உபயோகிக்கவோ முடியாது. அதுவும் ஒருநாள் இரண்டு நாள் அல்ல. ஒரு தடவை இரண்டு தடவைகளல்ல. பலநாள் அநேகத் தடவைகள் மருந்துகளைப் பிரயோகித்து வந்தால் அவரவர்களின் உடல்நிலை, ஆஸ்துமாவின் உக்கிரத் தாக்குதலின் நிலையை அனுசரித்து, நிற்பதும் குறைவதும் இருக்கிறது. ஆனால் நோய் என்னமோ ஏழை என்றும் பணக்காரனென்றும் வித்தியாசம் பார்ப்பதில்லை. அதன் திருஷ்டிக்கு எல்லோரும் சமமே.

ஆஸ்துமாவுக்கு டெலடோனு. நைட்ரோகிளிசரின், அட்ரினேலின் முதலிய ஊசி மருந்துகள் சீக்கிரம் குணத்தைத் தர உபயோகிக்கின்றனர். அட்ரினேலினை மூக்கருகே பீச்சுகிறார்கள். அதை மின்தால் அல்லது தைமால் இவைகளுடன் கலந்தும் பீச்சுகிறார்கள். வாயின் வழியே உறிஞ்சும் மருந்துகளும் உண்டு. ஆல்போலினோடு நீலகிரித் தைலம் கலந்தும் உபயோகிப்பதுண்டு. அமில் நைட்ரேட்டும் உபயோகிக்கிறார்கள். கிடோப்ரான் எனும் மூக்கின் வழியே உறிஞ்சும் மருந்து நல்ல வேலை செய்கிறது. மாத்திரை உள்ளுக்குக் கொடுக்கிறார்கள். மற்றும் எத்தனையோ விதக் கடும் விஷ மருந்துகளெல்லாம் உண்டு.

மார்பில் தைலம் தேய்த்து ஒத்தடம் கொடுப்பது: வெந்நீர் பாத ஸ்நானம் செய்விப்பது, ஊமத்தங்காய் விதை புகை பிடித்தல் போன்றவை சிறிது சாந்தி அளிக்க ஏழை மக்கள் உபயோகித்து வருகிறார்கள். மற்றும் எத்தனை எத்தனையோ வித மருந்துகள், மருத்துவங்கள் உண்டு.

ஆனால் இத்தனையும் தற்சாந்தியே தவிர முற்றிலும் போக்க முடியாது என்பது திண்ணம். 1927 வருஷத்திலேயே இதற்கு முடிவு கட்டி விட்டார்கள் லண்டனில் கூடிய ஆஸ்துமா பரிசோதனைக் கமிட்டியார். அவர்கள் தேகப் பயிற்சிகளினால்தான் இதைக் குணமாக்க முடியுமென்று சொல்லி விட்டார்கள். அதற்காக என்னவித தேகப் பயிற்சிகள் செய்யலாம் என்பதையும் ஒரு புத்தகமாக வெளியிட்டுள்ளார்கள். அதில் சில பயிற்சிகள் சற்றேறக்குறைய யோகாசனங்களை ஒத்து இருக்கின்றன. அதில் சொல்லி இருக்கப்பட்ட மூச்சுப் பயிற்சி நமது பிராணாயாமப் பகுதியாகிய உஜ்ஜயி என்னும் மூச்சுப் பயிற்சிக்குச் சிறிது ஒத்து இருக்கிறது.

அப்படியானால் அவர்கள் ஏன் யோகாசனங்களையும், பிராணாயாமங்களையும் சிபார்சு செய்யவில்லை என்ற கேள்வி எழலாம். 1927-ம் வருஷம் என்பது இப்போதைக்கு இருபத்தைந்து வருஷங்களுக்குப் பிந்தின வருடம். அப்பொழுது கூடி ஆராய்ந்த உடற்கூறு வல்லுநர்கள், வைத்தியர்கள், விஞ்ஞானிகள் இவர்கள் அந்நாட்டு நாகரிகத்தில், பண்பாட்டில் விஞ்ஞானத்தில் நம்பிக்கையுள்ளவர்கள்; அதில் அவர்கள் தேர்ந்தவர்கள். அவர்களுக்கு நம் நாட்டு யோகக் கலை அக் காலத்தில் தெரியாமல் இருந்திருக்கலாம். அல்லது நம்பிக்கை இல்லாமல் இருந்திருக்கலாம். சிலருக்கு அசட்டையும் இருந்திருக்கலாம். அப்பொழுது நம் நாடு அடிமை நாடு. அடிமை நாட்டில் என்னதான் சிறந்த உயர்ந்த கலைகளாய் இருந்தாலும் அவைகளை அவர்கள் கொண்டாடவோ, சிரத்தை காட்டவோ என்ன நியாய மிருக்கிறது! எவ்வளவு தூரம் நமது கலை, நமது பண்பாடு நமது பெருமை இவைகளை மங்கச் செய்கிறார்களோ அவ்வளவுக்கும் அவர்களுடைய அரசாட்சி நிலைத்து நிற்க முடியும். அவர்களது கலை, நாகரிகம் பண்பு பெருமை முதலியன இங்கு வளர்க்க முடியும். இத்துறையில் அவர்கள் பூரண வெற்றி கண்டார்கள் என்றே சொல்ல வேண்டும். சுதந்திரமடைந்து ஆறு வருஷங்களாகியும் இன்னமும் நமக்கு அவர்கள் நம்மிடையே வளர்த்து விட்டுச் சென்ற அடிமைப் புத்தி, நமது நாட்டுக் கலைகளின் மேல் சிரத்தை, நம்பிக்கை, அன்பு இல்லாமை, அவர்களின் நாட்டுப் பொருள்களின் மேல் மோகம், அவைகளையே உபயோகிக்கும் மனப்பான்மை முதலியவைகள் நம்மை விட்டு விலகவில்லை

அந்தக் காலத்தில் நமது நாடு சுதந்திரமாய் இருந்து நம்முடைய நாட்டுப் பிரதிநிதியாக ஒரு யோகக் கலை வல்லுநர் அந்த ஆஸ்துமா பரிசோதனைக் குழுவில் இருந்திருந்தாரேயானால், இந்த ஆஸ்துமாவைப் போக்குவது யோகக் கலைக்கு ஒரு குழந்தை விளையாட்டைப் போன்றது என்பதை நிரூபித்துக் காட்டியிருக்க முடியும். போனதை நினைத்துப் பயன் யாது!

ஆனால் அந்த ஆஸ்துமா பரிசோதனைக் கமிட்டியார் முடிவு செய்த தீர்மானப்படி ஆஸ்துமாக்

காரர்கள் செய்வதற்கென்ன! ஏன் அதைப் பிரபலப்படுத்தவில்லை; எல்லோரும் செய்யும்படி ஏன் செய்யவில்லை என்று கேட்கலாம்.

ஆம். கேட்க வேண்டிய கேள்விதான். அவர்கள் தீர்மானித்த முடிவுகளை அனுசரித்து எந்தெந்தப் பயிற்சிகள் செய்ய வேண்டியது; எப்படி மூச்சுப் பயிற்சி செய்ய வேண்டியது என்பதெல்லாம் புத்தகமாக வெளியிட்டு விட்டார்கள். அத்துடன் அவர்கள் கடமை முடிந்தது.

ஆனால் அதை ஆஸ்துமாக்காரர்கள் அனுசரிக்க வேண்டுமே! அதுதான் கிடையாது. நோய் என்றால் வைத்தியர்களை நாடிப் போவார்களே அன்றித் தேகப் பயிற்சிச்சாலைக்கு நாடிப் போகும் பழக்கம் சாதாரணமாய்ப் பழக்கத்தில் கிடையாது. வைத்தியர்களுக்கு நன்கு தெரியும், ஆஸ்துமாவுக்குத் தேகப்பயிற்சிதான் ஏற்றது என்பது. ஆனால் வரும் நோயாளிகளுக்குத் தேகப் பயிற்சிகள் செய் என்று சொன்னால் மறுபடியும் அந்த நோயாளி அந்த வைத்தியரை நாடி வருவாரா? அப்படிச் சொன்னால் இவர்கள் பிழைப்பும் நடவாது; இப்படிச் சொல்வது இவர்களின் தொழிலுக்கு முற்றிலும் புறம்பானது.

எனவே இந்தப் பயிற்சிகள் செய்வதனால் என்ன மாறுபாடு உடலில் உண்டாகிறது, அம் மாறுபாட்டை உண்டாக்கக் கூடிய மருந்து கண்டு பிடித்தால் சுலபமாக இவர்கள் மக்களை வசீகரிக்க முடியும் என்று வழி வகுத்தார்கள்.

ஆஸ்துமாக்காரர்களுக்கு நுரையீரலின் காற்றுக் குழாய் அடைப்பு நீங்கவும் நன்கு மூச்சு விடவும் வேண்டியது. இவர்கள் தேகப் பயிற்சி, மூச்சுப் பயிற்சி செய்தால் இவை குணமாகின்றன. அவ்வாறு தேகப் பயிற்சிகளும், மூச்சுப் பயிற்சிகளும் செய்யும் போது மூளையிலுள்ள பிட்யூடரி கோளம் சுறுசுறுப்படைந்து அதிலிருந்து ஹார்மோன் அதிகம் சுரக்கிறது. அதனால் மூச்சுக் குழாய் நரம்புகள் ஊக்குவிக்கப்பட்டு மூச்சு தாராளமாய் விட உதவுகிறது. அட்ரீனல் கோளமும் மூச்சுப் பயிற்சியினாலும், தேகப் பயிற்சியினாலும், ஊக்குவிக்கப்பட்டு அதிக ஹார்மோன்



ஊசியின் மூலம் இரத்தத்தில் செலுத்தி விட்டால், தேகப் பயிற்சியும், மூச்சுப் பயிற்சியும் செய்வதனால் கிடைக்கக் கூடிய பிட்யூடரி ரசமும் அட்ரீனல் ரசமும் சுலபமாய்க் கிடைத்து விடுகிறது. இந்த முறை வைத்தியத் தொழிலுக்கு முற்றிலும் பொருத்தமாகவும் இருந்தது; மக்களின் சோம்பேறி மனப்பான்மைக்குத் தூபம் போட்டாற் போலவும் இருந்தது.

எனவே, தம்மிடம் வரும் ஆஸ்துமா நோயாளிகளுக்கு, இம்மருந்தைச் சர்வ சாதாரணமாய் உபயோகிக்கத் தொடங்கினார்கள். இன்று இந்தப் பிட்யூடரி ஹார்மோனும், அட்ரீனல் ஹார்மோனும் ஏராளமாய் இறக்குமதியாகின்றன. பிட்யூடரி கோளத்திலிருந்து தயார் செய்த மருந்துக்குப் பிட்யூடரின் என்றும், அட்ரீனல் கோளத்திலிருந்து தயார் செய்த மருந்துக்கு அட்ரீனலின் என்றும் பெயர். இம்மருந்துகள் மற்றும் பலவிதத்தில், பல இரசாயனச் சேர்க்கைகளுடன் சேர்ந்து இந்த ஹார்மோன்களின் குறைவினால் மற்ற என்னென்ன வியாதிகள் உண்டாகின்றனவோ அவைகளனைத்துக்கும் அந்தந்த மருந்துகளை உபயோகிக்கின்றனர். இவ்வாறு 1927-ம் வருஷத்தில் ஆஸ்துமா பரிசோதனைக் கமிட்டியார் செய்த முடிவைத் தலை தூக்க விடாமல் குழி தோண்டிப் புதைத்து விட்டார்கள். இன்று அநேகமாய்ப் பலருக்கு இவ்விஷயம் தெரியாது. தெரிந்தவர்களும் மறந்து விட்டிருப்பார்கள். இருபத்தேழு வருஷங்களுக்கு முன்பு நடந்த விஷயம் யாருக்கு ஞாபகமிருக்கப் போகிறது! ஒரு தலைமுறை கடந்து விட்டதல்லவா!

உலகம் முழுவதற்கும் இந்த ஹார்மோன் கிடைக்க வேண்டுமானால் இவைகளை எப்படித்

தயாரிக்க முடியும்! மனிதனுக்கு உபயோகிக்க மனிதனிடமிருந்து இந்த ஹார்மோன்கள் பெற முடியாது. மனித இனத்தை அவ்வளவு சுலபமாக மாய்க்க முடியாது. எனவே மனிதனிலும் கீழான மிருகங்கள், பிராணிகளிடமிருந்து இந்த ஹார்மோன்களைத் தயார் செய்கிறார்கள். எவ்வாறு கல்லீரல் சத்து மருந்தை ஆடு, மாடு, மீன் முதலியவைகளிலிருந்து தயார் செய்கிறார்களோ, அவ்வாறே இந்த ஹார்மோன்களையும் மாடு, குரங்கு போன்ற பிராணிகளைக் கொன்று அவைகளிலுள்ள பிட்யூடரி, அட்ரனேல் உறுப்புகளிலிருந்து தயார் செய்கிறார்கள். மற்றும் இந்த ஹார்மோன்களின் இரசாயனச் சேர்க்கைகளை விஞ்ஞான ரூபமாய்ப் பிரித்தறிந்து, எந்தெந்த இரசாயன வஸ்து எவ்வளவு சேர்கின்றது என்பதைக் கணக்கிட்டு அந்த அளவின்படி மற்ற இரசாயன வஸ்துக்களைக் கொண்டும் ஹார்மோன்களைத் தயார் செய்து விடுகின்றார்கள்.

சில காலங்களுக்கு முன்புகூட ரோஜா அத்தர் வேண்டுமானால் ரோஜாத் தோட்டங்களை வளர்த்து அதன்மேல் பெல்லிய மஸ்லின் துணி போட்டு இரவில் அதன்மேல் பனி பெய்ய, அதை அதிகாலை எடுத்துப் பிழிந்து அதிலிருந்த ரோஜா அத்தரைத் தயாரிப்பார்கள். அப்படிச் செய்த ரோஜா அத்தர்தான் உயர்ந்தது; விலையும் அதிகமாகும். நூர்ஜஹான் காலத்தில் அப்படிச் செய்ததாகப் படிக்கிறோம். இப்பொழுதெல்லாம் அப்படிச் செய்வதில்லை. ரோஜா அத்தரின் இரசாயனச் சேர்க்கைகளை அறிந்து, அந்த இரசாயனச் சரக்குகளை ஒன்று சேர்த்து விட்டால் ரோஜா அத்தர் ஆகி விடுகிறது. விலையும் மலிவு.



எல்லோரும் சுலபமாய் வாங்கலாம். இம்மாதிரியே எந்த அத்தரையும் செய்து விடுகிறார்கள். அதைப் போலவேதான் இந்த ஹார்மோன்களையும் தயார் செய்து எல்லோருக்கும் கிடைக்கும்படி செய்கிறார்கள். எனினும், இந்த ஹார்மோன் மருந்துகளும் ஏழைகள் வாங்கக் கூடியதாய் அவ்வளவு மலிவாய் அதன் விலை இல்லை. அப்படி வாங்கினாலும் எந்த வைத்தியராவது இலவசமாய் ஊசி போடுவாரா! அப்படிப் போட்டால் வைத்தியர் பிழைப்பது எப்படி! பணம் கேட்பது நியாயம் தானே! இவ்வாறு ஆஸ்துமா உலகம் வாடுகிறது.

## அவன் யோசனை!






## போட்டோ தொழிலில் 60 வருஷ சிறந்த சேவை









**கேவாபான் 33**

பகல் வெளிச்சத்திற்கும் செயற்கை வெளிச்சத்திற்கும் சிறந்தது இந்த மின்னல்வேக பான்க்ரோமாடிக் பிலிம்

**கேவாகுரோம் 30**

பகல் வெளிச்சத்திற்கு மிகவும் உகந்தது ஆர்தோ குரோமாடிக் பிலிம்.

இலவச விவரங்களுக்கும் "கேவார்ட்" எக்ஸ்போஷர் கால்குலேட்டருக்கும் கீழ்க்கண்ட விலாசத்திற்கு எழுதவும்:

**Allied Photographics Limited**

**அல்லீட் போட்டோகிராபிக்ஸ் லிமிடெட்**

(பேஸிக் டிபார்ட்மெண்ட்) கஸ்தூர் பில்டிங்ஸ், ஜாம்ஷெட்ஜி டாடா ரோடு, பம்பாய்-1

கிளை ஆபீஸ்கள்: பம்பாய் - கல்கத்தா - மதராஸ் - புது டில்லி

# பொல்லாத பொன்னம்மாள்!

நா. வி. பரமேசுவரன்

அவன் ஆறடி ஓர் அங்குலத்துக்கு மேல் உயரமுடையவன். உயரத்துக்கு ஏற்றபடி கருத்துப் பருமனான உடல். ஒரு லுங்கி கட்டிக் கொண்டு கிழிந்த காக்கிச் சட்டையையும் அணிந்து கொண்டிருப்பான். அநேக தடவைகள் அந்தப் பெரிய ஆள் ஓட்டலுக்கு எதிரில் நிற்பதை நீங்கள் பார்த்து இருக்கலாம். ஆனால் கவனித்துப் பார்த்திருப்பீர்களோ என்னமோ!

அவன் பெயர் குட்டன். அந்த ஊர் பஸ் நிலையத்தில் அவன் கூலி வேலை பார்த்துக் கொண்டிருந்தான். அதிகாலையில் வெளியூருக்கு முதல் முதல் பஸ் கிளம்பும் பொழுது ஐந்து மணி சுமாருக்கு அங்கு தினந்தோறும் வருவான். இரவில் ஒன்பதரை மணி சுமாருக்குக் கடைசி பஸ் வரும் வரையிலும் அங்குதான் இருப்பான். தான் ஒரு பெரிய ஆள் என்ற நினைவில் பிறரைச் சற்று ஏளனத்துடன் தான் பார்ப்பான்.

வெளியூர் பஸ்கள் எல்லாம் அந்த ஓட்டல் வாயிலில் வந்து நிற்பது வழக்கம். அவைகளிலிருந்து பெட்டி, படுக்கை, சாமான்களைக் கீழே இறக்கி வைப்பதும் மேலே ஏற்றுவதும் அவன்தான். கீழே நின்றபடியே அவன் அந்த வேலையைச் செய்து முடித்து விடுவான். அவனுக்கு எட்டாத இடம் ஒரு பஸ்ஸிலும் கிடையாது. என்ன கனம் இருந்தாலும் இடது கையால் பிடித்து இழுத்து வலக்கையால் தாங்கிக் கொண்டு கீழே வைத்து விடுவான்

அந்த பஸ் நிற்குமிடத்தில் அவனைத் தவிர எத்தனையோ கூலியாட்கள் இருக்கத்தான் இருந்தார்கள். சிறுபிள்ளைகளானாலும் வயது வந்தவர்களானாலும் அவனுடைய அனுமதியின்றி அந்தக் கூலியாட்களுள் எவனும் ஒரு சாமானையாவது தொட மாட்டார்கள். எவனுக்காவது அதற்குப் போதுமான தைரியம் இருப்பதில்லை. சாமான்களைக் கீழே எடுத்து வைத்துக் கூலி வாங்கியவுடன் அவன் யாரையாவது பார்த்து, "டேய் இதை எடுத்துக் கொண்டு கூடப் போ!" என்று ஒரு கட்டளை போடுவான்.

சிறிய சாமான்களுக்கு ஓரணாவும் பெரிய சாமான்களுக்கு இரண்டணாவும்தான் அவன் பெற்றுக் கொள்ளும் கூலி. சாமான்களை ஏற்றி வைத்தவுடன் அல்லது இறக்கி வைத்தவுடன் கை நீட்டினால் உடனே கூலிப் பணத்தைக் கொடுத்துவிட வேண்டும். அப்படி யாராவது கொடுக்க வில்லையென்றால் தன் சிவந்த கண்களால் ஒரு தடவை முறைத்துப் பார்ப்பான். அவ்வளவுதான். மறு கணமே வாய் பேசாமல் அவன் கூலியைக் கொடுத்து விடுவார்கள்.

எல்லோரும் அவனைப் பார்த்து நடுங்குவார்கள். அவன் பக்கத்தில் நின்று பேசுவதற்குக் கூட பயம். ஆனால் அவன் யாரையும் வீணுக்குத் தொந்தரவு செய்ததில்லை. எப்பொழுதாவது கோபித்துக் கொண்டால் "உம், அவனை அடித்து விடுகிறேன். நொறுக்கி விடுவேன்" என்று கர்ஜிப்பான்.

ஆனால் குட்டன் யாரையும் இதுவரை நசுக்கினதாகவோ, நொறுக்கினதாகவோ தெரியவில்லை

நாளொன்றுக்கு நாலு அல்லது ஐந்து ரூபாய் சம்பாதிப்பான். ஓட்டல் எதிரே எப்பொழுதும் அவனைப் பார்க்கலாம். ஆனால் அவன் சாப்பிடுவதும், சிற்றுண்டி, தேநீர் அருந்துவதும் பக்கத்திலிருக்கும் மிலிட்டரி ஓட்டலில்தான்.

கடைசி பஸ் வந்த பிறகு அன்றைய வேலையை எல்லாம் முடித்து விட்டு இரவு சாப்பாட்டுக்காக மிலிட்டரி ஓட்டலுக்குப் போவான். அப்படிச் செல்லும்பொழுது "மடையா, கழுதை" என்ற வசை மொழிகளால் அங்கிருக்கும் சிறு பிள்ளைகள் அனைவரையும் அழைத்துக் கொண்டு போவான். அவன் அன்புடன் அழைத்துப் போகும் முறை இது. அவர்கள் எல்லோருக்கும் சோறு வாங்கித் தந்து, 'மடையன், முட்டாள்' போன்ற வசை மொழிகளைக் கொட்டி அவர்களை விரட்டுவான்.

ஒரு நாள் இரவு வழக்கம் போல் பிள்ளைகளைச் சாப்பாட்டுக்காக அழைத்தான். அப்பொழுது அவர்களுடன் ஒரு பிச்சை எடுத்துப் பிழைக்கும் பெண்ணும் வந்தாள்.

'நீ எங்கே போகிறாய்!" என்று கடுமையான குரலில் கேட்டான் குட்டன்.

"இன்றைக்கு எனக்கு ஒன்றும் கிடைக்கலீங்க" என்றாள் அந்தப் பெண்.

"உம்... வந்து நீயும் சாப்பிட்டுத் தொலை" என்று அவளையும் அழைத்தான்.

சாப்பிட்ட பிறகு பிள்ளைகள் எல்லோரும் ஒரு கடை ஆளோடியில் படுத்துக் கொண்டனர். அந்தப் பெண்ணும் அங்கே காலியாகக் கிடந்த ஒரு பெட்டியின் மறைவில் போய்ப் படுத்தாள்.

அந்த ஓட்டலின் ஆளோடியில் கூலிக் கோணிப் பைகளை விரித்துக் கொண்டு வழக்கம்போல் படுத்தான் குட்டன். ஆனால் இன்று அவனுக்குத் தூக்கம் வரவில்லை. படுக்கையில் புரண்டு கொண்டே சிறிது நேரம் கழித்தான். பிறகு எழுந்து நடுச் சாலைக்கு வந்தான்.

தெருவில் இருக்கும் நகர சபை விளக்குகள் எல்லாம் அணைந்து விட்டன. அவன் சுற்று முற்றும் பார்த்தான்.

தெருவில் யாரும் இல்லை. பிள்ளைகள் எல்லோரும் நிம்மதியாகத் தூங்கிக் கொண்டிருந்தனர். அவன் மெள்ள நடந்து அந்தப் பெட்டியின் அருகே சென்றான்; எட்டியும் பார்த்தான்.

"ஏ, பொன்னு!" என்று கூப்பிட்டான்.

"ஐயோ" என்று கூக்குரல் இட்டபடி அந்தப் பெண் எழுந்திருந்தாள்.

"சீ, கத்தாதே!" என்றான் அவன்.

அங்கு தூங்கிக் கொண்டிருந்த சிறுவர்கள் எல்லோரும் விழித்துக் கொண்டு "என்ன! என்ன!" என்று கேட்டுக் கொண்டே அங்கு வந்தனர்.

"போய்த் தூங்குங்கோடா!" என்று அவன் கத்தி விட்டுத் திரும்பிப் போய் விட்டான்.

சிறிது நேரத்துக்குப் பிறகு ஓட்டல் ஆளோடியில் இருந்து குட்டன் 'கர்' 'கர்' என்று நெடிய குறட்டை விடும் சத்தம் கேட்டது.

மறுநாள் காலையில் அவன் அந்தப் பெண்ணை அழைத்து "ஜாக்கிரதை! இனி இந்தப் பக்கம் வந்தால் உன்னை நசுக்கி விடுவேன்" என்றான்.

"நான் என்ன தவறு செய்தேனுங்க!" என்று நடுங்கிக் கொண்டே கேட்டாள் அந்தப் பெண்.

"இங்கு நிற்கக் கூடாதென்றல்லவா சொன்னேன் ஓடி விடு. இல்லையேல் அடித்துப் போட்டு விடுவேன்" என்றான் மறுபடியும்.

அவளுக்கு ஒன்றும் புரியவில்லை. ஆனால் குட்டனைப் பார்த்துப் பயந்து விலகி விட்டாள்.

**　　**　　**

ஒரு நாள் வழக்கம்போல் குட்டன் ஓட்டல் வாயிலில் நின்று கொண்டிருந்தான். அப்பொழுது தெருக்களைப் பெருக்கிச் சுத்தம் செய்யும் இரண்டு பெண்கள் அந்த வழியே சென்றனர். ஒருவருக்கொருவர் ஏதோ பேசிக் கொண்டே வந்து கொண்டிருந்தனர். ஒருத்தி வைத்துக் கொண்டிருந்த துடைப்பம் தெறித்து நிற்கும் குட்டன் மேல் பட்டு விட்டது.

“சீ! ஒதுங்கிப் போகக் கூடாது!” என்று பயங்கரமாகக் கர்ஜித்தான் குட்டன்.

அவள் திரும்பிப் பார்த்து, “நீதான் சற்று விலகி நிற்கக் கூடாதோ?” என்றாள்.

குட்டனைப் பார்த்து யாருமே அதுவரையில் எதிர்க் கேள்வி கேட்டதில்லை. அவன் அவளை ஒரு முறை உற்றுப் பார்த்தான்.

சிறிதும் தயக்கம் இன்றி அவளும் அவனை முறைத்துப் பார்த்தாள்.

“ஹூம்” என்றான் குட்டன்.

“ஹூம்” என்றாள் அவளும். குட்டனை ஒரு முறை அலட்சியமாகப் பார்த்து விட்டுத் தன் தோழியுடன் சென்று விட்டாள்.

அவள் ஒரு இளம் பெண். காற்றில் ஆடி அசையும் ஒரு கொடியைப் போலிருந்தாள். அவள் பெயர் பொன்னம்மாள்

ஒரு துண்டைக் கட்டிக்கொண்டு ஒரு ஜாக்கெட்டை அணிந்து, தலைமயிரை அழகாகக் கட்டித் துடைப்பத்தைக் கையில் வைத்தபடி அவள் தினந்தோறும் அந்த வழியாகத்தான் செல்வாள். சாமான் தூக்கும் பிள்ளைகள் பஸ், லாரி இவைகளைச் சுத்தம் செய்யும் தொழிலாளிகள் எல்லோரும் அவளைக் கவனித்திருக்கிறார்கள். தன்னை உற்றுப் பார்க்கிறவர்களைக் கூச்சம் இன்றி அவளும் உற்றுப் பார்ப்பாள்.

இத்தனை நாள் வரையிலும் குட்டன் அந்தப் பெண்ணைக் கவனித்தது இல்லை. சிறிதும் தயக்கம் இன்றித் தன்னைப் போல் அவளும் ‘ஹூம்’ என்றதில் அவனுக்குச் சற்று மனத்தாங்கல்.

அன்றைய வேலையை முடித்துக் கொண்டு பொன்னம்மாள் அந்த வழியாகத்தான் திரும்பினாள். அப்பொழுது குட்டன் ஒரு பஸ்ஸில் சில சாமான்களை ஏற்றி வைத்துக் கொண்டிருந்தான். அவன் பார்க்கவேண்டும் என்பதற்காகவே பொன்னம்மாள் அவன் பக்கத்தில் நடந்து சென்றாள்.

“ஹகும்” என்றான் குட்டன்.

“ஹகும்” என்றாள் பொன்னம்மாளும்.

மறு நாளும் அவளும் தோழியும் வேலைக்குச் செல்லும்பொழுது குட்டன் அங்கு நின்றபடி அவளை உற்றுப் பார்த்தான். அவள் தோழியிடம் மெல்லிய குரலில் அவனைப் பற்றி என்னவோ சொல்லிச் சிரித்தாள்.

இப்படி நான்கு ஐந்து நாட்கள் நடந்தன. குட்டனுக்கும், பொன்னம்மாளுக்கும் சண்டை நடந்தது என்றும் குட்டனை அவள் தோற்கடித்து விட்டாள் என்றும் எல்லோருக்கும் தெரிந்து விட்டது. அவளுக்கு ஒரு பாடம் கற்பிக்க வேண்டும் என்று நிச்சயம் செய்து கொண்டான் குட்டன்.

மறு நாள் பொன்னம்மாளும் அவள் தோழியும் வேலைக்குப் போய்க்கொண்டிருந்த பொழுது குட்டன் அவளுடைய கையிலிருந்த துடைப்பத்தைப் பிடுங்கி வீசி எறிந்தான்.

“ஐயய்யோ! இந்தக் கொலைகாரப் பாவி என்னைக் கொல்லுகிறான்! ஓடி வாருங்கள்! காப்பாற்றுங்கள்!” என்று கூக்குரலிட்டபடியே அவள் தெருவில் விழுந்து விட்டாள்.

குட்டன் பரபரப்படைந்தான். அவன் கொஞ்சங்கூட எதிர்பாராத நிகழ்ச்சி இது. பஸ் நிலையத்தில் கூடியிருந்த அத்தனை பேரும் பொன்னம்மாளையும் குட்டனையும் சூழ்ந்து கொண்டார்கள்.





லேடி எம். ஸி. டி. முத்தையாச் செட்டியார் பெண்கள் பாடசாலையில் ஏப்ரல் மாதம் இருபத்து நாலாம் தேதி சென்னை, புரசைவாக்கம் டாக்டர் ருக்மணி வாசுதேவன் சங்கீத வித்யாலயத்தின் ஸ்தாபகர் தின எட்டாம் ஆண்டு விழா மிகச் சிறப்பாக நடைபெற்றது. இந்த விழாவுக்கு ஸ்ரீமதி ஜோதி வெங்கடாசலம் அவர்கள் தலைமை வகித்து, சங்கீத வித்யாலயத்தில் சங்கீத பரீட்சையிலும், சங்கீதப் போட்டியிலும் வெற்றி பெற்ற மாணவிகளுக்குப் பரிசுகள் வழங்ினார்கள். மேற்படி விழாவில் கலந்து கொண்ட பிரமுகர்களையும் மாணவிகளையும் மேலே உள்ள படத்தில் காணலாம்.

---

பொன்னம்மாள் எழுந்து நின்றபடி அவன்மீது வசை மொழிகளைப் பொழிந்து தள்ளினாள்.

"இந்தக் கொலைகாரப் பாவிக்கு என்னைப் பார்த்தால் ஆகாது...இவன் என்னைக் கொல்லுவதற்கே முனைந்து கொண்டிருக்கிறான். இப்பொழுது நான் சும்மா போய்க் கொண்டிருக்கும்போது என்னை அடித்துக் கொல்ல......"

"பொன்னம்மா, அவன் கிடக்கிறான்; நாம் போகலாம்" என்றாள் தோழி. குட்டன் ஒன்றும் பதில் பேசவில்லை. அவனுடைய பரபரப்பு இப்பொழுதும் அடங்கவில்லை. எறும்பு யானையைத் தோற்கடித்து விட்டது என்ற எண்ணம்தான் அவன் உள்ளத்தில் மேலோங்கி நின்றது.

கீழே கிடந்த துடைப்பத்தை எடுத்துக் கொண்டு பொன்னம்மாளும் அவள் தோழியும் அங்கிருந்து சென்று விட்டார்கள்.

அன்றும் வேலை முடிந்து அவர்கள் திரும்பி வந்தபொழுது பொன்னம்மாள் குட்டனை ஒரு குறும்புப் பார்வை பார்த்தாள்.

மறுநாள் பொன்னம்மாள் வேலைக்குச் சென்று கொண்டிருந்த பொழுது "உன்னை நான் என்ன பண்ணுகிறேன் பார்" என்றான் குட்டன்.

"உன்னையும் நான் என்ன பண்ணுகிறேன் பார்!" என்றாள் பதிலுக்கு அவளும்.

** ** **

குட்டனும் பொன்னம்மாளும் கடைசியில் கலியாணம் பண்ணிக் கொண்டார்கள். அவனுடைய சின்னஞ் சிறு கூரை வீட்டில் அவளும் சேர்ந்து குடியிருக்க ஆரம்பித்து விட்டாள். அதுதான் அவர்களுடைய கலியாணம்.

"என்ன ஜாலக்காரி! அவனைக் கல்யாணம் செய்து கொள்ளத்தான் அவள் இத்தனை நாட்கள் அவனிடம் வாதாடியிருக்கிறாள்" என்று சொன்னார்கள் குட்டனுடைய நெருங்கிய நண்பர்கள்.

குட்டனும் பொன்னம்மாளும் குடித்தனம் ஆரம்பித்த மறுநாள் குட்டனைப் பார்ப்பதற்குப் பஸ் நிலையத்தில் ஏகப்பட்ட ஜனங்கள் கூடியிருந்தனர். குட்டன் அன்று எண்ணெய் தேய்த்துக் குளித்திருந்தான். தலை மயிரை அழகாக வாரி விட்டுக் கொண்டிருந்தான்.

நல்ல வேஷ்டியும் நல்ல சட்டையும் அணிந்து கொண்டிருந்தான். "புது மாப்பிள்ளை என்றால் அப்படித்தான் இருக்க வேண்டும்" என்று எல்லோரும் அவனைப் பாராட்டினார்கள்.

"டேய், பசங்களா! இங்கே என்னடா பார்த்துக் கொண்டிருக்கிறீர்கள்!" என்று சொல்லிப் பையன்களை அங்கிருந்து விரட்டினான் குட்டன்.

வழக்கம்போல் பொன்னம்மாளும் அவள் தோழியும் அந்த வழியாக வந்தனர். பொன்னம்மாளின் நடை, உடை பாவனையில் மாறுதல் ஒன்றும் இருக்கவில்லை. வழக்கம் போலவே இருந்தாள்.

அவள் குட்டனுடன் வந்து கொண்டிருந்தாள். அவன் இடுப்புக்குத்தான் அவள் வந்தாள். அவ்வளவு குட்டை அவன். முகத்தை உயர்த்தி அவளிடம் என்னமோ சொன்னான். அவள் சிறிது குனிந்து நின்றாள். அவனுடைய சட்டை ஜேபியில் கையை விட்டு அதிலிருந்த சில்லறைகளையெல்லாம் எண்ணி எடுத்துக் கொண்டாள்.

இதைப் பார்த்து நின்ற பிள்ளைகள் எல்லோரும் ஏளனமாக நகைத்தார்கள். கேலி செய்தார்கள்.

குட்டன் வெட்கி நின்று விட்டான். பொன்னம்மாள் சிறிதும் தயக்கம் இன்றிச் சில்லறைகளை எண்ணி விட்டு ஒரு அணாவை அவன் கையில் கொடுத்து "உன் செலவுக்கு வைத்துக்கொள்" என்றாள். மீதிச் சில்லறையைத் தன் புடவை முன்தானையில் முடிந்து கொண்டபடி தன் தோழியுடன் அங்கிருந்து சென்று விட்டாள்.

வேலை முடிந்து மத்தியானம் திரும்பி வரும் பொழுதும் அவள் அவன் பக்கத்தில் சென்று நின்றாள். அவன் சிறிது குனிந்து கொடுத்தான்.

# அரவிந்த்
## மில்லுகளின் உயர்ரக

# ஷர்டிங்குகள்
# பாப்லின்கள்
# கோட்டுத்துணிகள்

**·SANFORIZED·** REGD.

(ஸான்பொரைஸ்ட்)
ஏற்கனவே சுருக்கப்பட்ட

# பலவர்ண ப்ரிண்ட்டுகளும்




வாயல்கள் - கேம்ப்ரிக்குகள் -
பாப்லின்களும்

**அரவிந்த் மில்ஸ் லிமிட்டெட்டு**
அஹமதாபாத் - 2

---

ஏஜண்டுகள்:

**அஜித் பாய் ஜயந்திலால் & கம்பெனி**
5, லிடங்கு தெரு, சென்னை-76, கீழ மாசி வீதி, மதுரை & விஜயவாடா

**யு. என். ஷர்மா**
சிக்பேட், பெங்களூர் சிட்டி

**கணேஷ்மல் பிரதாப்மல் & கம்பெனி**
கார் தெரு, பெல்லாரி

**நாக்ஜி புருஷோத்தம் & கம்பெனி லிமிடெட்**
பெரிய கடைத் தெரு, த. பெ. 36, கோழிக்கோடு



மேற்கு இந்தியக் கொத்து: மிகவும் கெட்டியானது. ஆயினும் வேலை செய்ய சுலபமானது. உறுதிவாய்ந்ததால் நீடித்துழைக்கக்கூடியது.



மைசூர் மண்வெட்டி: கூராகவெட்டும் முனைகள் நன்ருக வேலை செய்கின்றன. சீரான அமைப்புள்ளதால் வேலை செய்ய சுலபமானது.



டாங்க் மண்வெட்டி: ஆழமாக வெட்டுவதற்கு உகந்தது. நீடித்துழைக்கக் கூடியது.

# லாபகரமான பண்ணை வேலைகளுக்கு அக்ரிகோ கருவிகளை நம்பலாம்




இந்தியாவின் ஆயிரக்கணக்கான பண்ணைகளில் அக்ரிகோ கருவிகள் அற்புதமாக வேலைசெய்து வருகின்றன. ஹை-கார்பன் எஃகிலிருந்து தயாரிக்கப்பட்டு நீடித்துழைப்பதற்காக பரிசீலனை செய்யப்பட்டிருப்பதால் அக்ரிகோ கருவிகளையே எல்லா விவசாயிகளும் விரும்புகிருர்கள்

## டாடா அக்ரிகோ கருவிகள்



தி டாடா அயரன் & ஸ்டீல் கம்பனி லிட்.,
தலைமை ஸேல்ஸ் ஆபீஸ்:
23-B நேதாஜி சுபாஷ் ரோட், கல்கத்தா-1
கிளை ஆபீஸ்கள்:
பம்பாய், மதருஸ், நாக்பூர்,
அஹமதாபாத், ஸெகந்திராபாத்,
விஜயநகரம் கன்டோன்மென்ட்,
ஜலந்தர் கன்டோன்மென்ட், கான்பூர்
& பாட்ஞ

AG. 3867

ஜேபியிலிருந்த காசை எல்லாம் எடுத்துக் கொண்டான். பிறகு 'வா' என்று சொல்லிவிட்டு அவள் முன்னே நடந்தாள். அவளைத் தொடர்ந்து ஒரு பூனை போல் அவனும் நடந்து சென்றான்.

மத்தியான ஆகாரத்தை முடித்துக்கொண்டு குட்டன் பஸ் நிலையத்துக்கு மறுபடியும் வந்தான். இரவில் கடைசி பஸ் வந்த பிறகு வீட்டுக்கு, அதாவது பொன்னம்மாளின் வீட்டுக்குச் சென்றான்.

பஸ் நிலையத்தில் இருக்கும் அநாதைப் பிள்ளைகளுக்கு இப்பொழுது எல்லாம் குட்டனிடமிருந்து காலணாகூடக் கிடைப்பதில்லை. எல்லோரும் பொன்னம்மாளை ஆசைதீர வைதனர். "மாயக்காரி! அவனைத் தன் வலையில் சிக்கவைத்துக் கொண்டு விட்டாள்" என்றுபேசிக் கொண்டனர்.

நாட்கள் சென்று கொண்டிருந்தன. இப்பொழுதெல்லாம் குட்டன் ஒரு நாள் தவறாமல் பல் துலக்குவது, தலை மயிரை வாரிவிட்டுக் கொள்வது, இரண்டு மூன்று நாட்களுக்கு ஒரு தடவை முக க்ஷவரம் செய்து கொள்வது, புதிய சட்டை வேஷ்டி போட்டுக் கொள்வது முதலிய பல காரியங்கள் செய்ய ஆரம்பித்து விட்டான். அவன் வாழ்க்கையில் ஒழுங்கு ஏற்படலாயிற்று. பொன்னம்மாள் வேலைக்குப் போகும் பொழுதும் திரும்பி வரும்பொழுதும் குட்டனுடைய சட்டைப் பையிலிருந்து சில்லறை அனைத்தையும் எடுத்துச் சென்று விடுவாள்.

ஒரு நாள் பொன்னம்மாளின் தோழி குட்டனை ஓரக் கண்ணால் பார்த்தாள். குட்டனும் அவளைப் பார்த்தான். அதைக் கவனித்ததாகப் பொன்னம்மாள் காட்டிக் கொள்ளவில்லை. இவ்வாறு பல நாட்கள் பறந்து சென்றன.

ஒரு நாள் அதிகாலையிலேயே குட்டன் பஸ் நிலையத்துக்கு வந்து விட்டான். தலைமயிரை வாரிக் கொண்டிருக்கவில்லை. அவன் உள்ளத்தில் மனச் சோர்வும் பரபரப்பும் பீதியும் இருந்து வந்தன.

சிறிதுநேரம் கழித்துப் பொன்னம்மாள் அந்த வழியாக ஓடோடியும் வந்து கொண்டிருந்தாள். அவளைப் பார்த்தவுடன் தப்பித்துக் கொள்வதற்கோ என்னமோ குட்டன் ஓட்டல் ஆனேரடியில் ஏறிக் கொண்டான். பொன்னம்மாள் ஓட்டலின் வாயிலில் வந்து நின்றாள். அப்போது அவள் பத்திரகாளியைப் போல் தோற்றமளித்தாள்.

"குட்டா! இங்கே இறங்கி வா!" என்றாள்.

குட்டன் தூணில் மறைந்தபடி நின்றுவிட்டான். வெளியே வரவில்லை.

"இங்கே வருகிறாயா, நான் அங்கு வரட்டுமா!" என்று பயங்கரமாகக் கூக்குரலிட்டாள்.

குட்டன் படிக்கட்டு வழியாக இறங்கிச் சாலையை அடைந்தான். ஒரு கொலைகாரன் அல்லது திருடனைப் போல் விழித்தான்.

"நேற்றிரவு எங்கே போயிருந்தாய்!" என்று கேட்டபடி அவன் அருகில் சென்றாள்.

அவன் மிகுந்த மனக்கிலேசத்துடன் பொன்னம்மாளைப் பரிதாபமாகப் பார்த்தான்.

பொன்னம்மாள் கண்களில் கண்ணீர் மல்க அவனைப் பார்த்தாள். அவளுக்கு ஆத்திரம் ஆத்திரமாக வந்தது. சின்னக் குழந்தையைக் கண்டித்துத் தண்டிப்பது போல குட்டனைக் கடிந்து கொண்டிருந்தாள் பொன்னம்மாள்.

"இனி மேல் போவாயா!" என்று குட்டனைக் கடுமையான குரலில் கேட்டாள்.

"இல்லை; இனிமேல் போகமாட்டேன்" என்று தன் தவறை உணர்ந்தவன் போல் மிக மெல்லிய குரலில் பதில் அளித்தான்.

"சரி, வா! போகலாம்" என்றாள்.

யாருக்குமே தலை வணங்காத குட்டன் பொன்னம்மாளின் புனித அன்பில் கட்டுப்பட்டு அவள் பின்னால் ஒரு பூனைக் குட்டியைப் போலத் தலை குனிந்த வண்ணம் நடந்து சென்றான்.

இதுவரை பார்த்தறியாத இந்தக் காட்சியைப் பார்த்து பஸ் நிலையத்தில் உள்ள எல்லாரும் வியந்து நின்றனர். — ஒரு மலையாளக் கதை.

# வண்டே! கேள்!

சைவமும் தமிழும் தழைக்கத் தமிழகத்தில் எத்தனையோ பக்தமணிகள் தோன்றித் தீந்தமிழ்ப் பாக்கள் புனைந்து அரும் பெரும் தொண்டாற்றியிருக்கின்றனர். அத்தகைய பக்தமணிகளுள் மாணிக்கவாசக சுவாமிகளை முதன்மையாகக் கூற வேண்டும். வாதவூரர் என்னும் திருநாமத்துடன் பல்வளம் பெருகும் பாண்டியம் பதியில் சுவாமிகள் அவதரித்தார். அவர் அப்பர், சுந்தரர், சம்பந்தர் ஆகிய மூவரையும் பெருங் குரவர்கள் மூவருக்கும் முன்னாக அவதரித்து, தெய்வ நெறியில் படிந்துசைவநெறியைக் கடைப்பிடித்து வாழ்ந்தஞானபுருஷர்; பாண்டிய நாட்டு மன்னனின் அரியாசனத்துக்குச் சரியாசனம் வகித்து, அமைச்சர் பதவி ஏற்று ஆட்சி புரிந்த அறிஞர் பெருந்தகை; அரனடி மறவாத அன்பர்; பாண்டிய மன்னன் அரிமர்த்தனனையும் அன்புப் பணியில் ஈர்த்து பக்தியின் பெருமையை அவனுக்கு உணர்த்தியவர்; பிறைசூடிய பெருமானே ஞான குருவாக வந்து வாதவூரடிகளை ஆட்கொண்டருளினார். அடிகள் அகங் குழைந்து பாடிய திருவாசகத்தில் உருகிய சிவபெருமான் அவரை மாணிக்கவாசகர் என்று அழைத்தார்.

"திருவாசகத்துக்கு உருகாதார் ஒரு வாசகத்துக்கும் உருகார்" என்பது முதுமொழி. அந்நூல் கருத்திலும் கற்பனையிலும் சிறந்து விளங்குவதோடல்லாமல், சொல் அழகிலும் சிறந்து விளங்குதலால் திருவாசகம் (அழகியசொல்) என்னும் சிறப்புப் பெயர் பெற்றது.



திரு நவநீதகிருஷ்ண பாரதியார்

இத்தகைய பழம் பெருமை வாய்ந்த பண்டை நூலுக்கு விரிவான ஆராய்ச்சிப் பேருரை எழுதி யிருக்கிறார், பண்டித மணி திரு க. க. நவநீத கிருஷ்ண பாரதியார் அவர்கள்.

திருவாசகத்துக்கு உரை எழுதுவது என்பது மாபெரும் முயற்சி. ஸ்ரீ மாணிக்கவாசகர் தெய்வத்தன்மை வாய்ந்தவர்; அவர் இயற்றிய திருவாசகமும் தெய்வத்தன்மை வாய்ந்தது. இறைவனின் திருவருட் பெருக்

## பந்து தப்பியது!



கத்தையும், அவன் அடியார்களை ஆட்கொள்ளும் பேரன்பின் நிலைமையும், இதயமும் இதயமும் ஒன்றுபட்ட இடத்து எழும் உள்ளக் கசிவையும் சுவாமிகள் பக்திப் பனுவல்களாக இசைத்திருக்கிறார்.

திருவாசகம் சொல்லும் நெறி, அன்பு நெறி; அதாவது, காதலன் — காதலி; குழந்தைகள்— பெற்றோர்; தோழர்—தோழியர்; ஆண்டான்— அடிமை ஆகிய அன்பின் தொடர்பு பற்றி வரும் உறவு முறைகளைக் கொண்டு இறைவனிடத்து உண்டாகும் ஈடுபாட்டை அடிப்படையாகக் கொண்ட பக்தி நூல் திருவாசகம்.

திருவாசகத்துக்கு உரை எழுதுவது என்றால், அந் நூலில் பெரிதும் ஈடுபாடு வேண்டும்; தமிழில் தேர்ந்த புலமை வேண்டும்; எல்லாவற்றுக்கும் முதன்மையாகத் தெய்வப் பற்று வேண்டும்.

மேற்கூறிய யாவும் ஒருங்கே கொண்ட அறிஞர், யாழ்ப்பாணத்துக் கவுணியன் வெண்ணெய்க் கண்ணனார் என்னும் பண்டிதமணி க. சு. நவநீத கிருஷ்ண பாரதியார் அவர்கள் ஆவர். சோழ வள நாட்டில் முத்தமிழ்ப் புலவர் பரம்பரையில் தோன்றிய ஸ்ரீ பாரதியார் தமிழில் பெரும் புலமை பெற்று, திருவாவடுதுறை ஆதீனத்தில் திருமுறை ஆராய்ச்சித் துணைவராயமர்ந்து தொண்டாற்றினார். பிறகு தாய்நாட்டிலிருந்து சேய்நாடு சென்று தமிழன்னைக்கு அரும்பணி புரிந்து வருகிறார்.

பண்டித மணி இயற்றிய இவ்வரிய உரை நூல், இனிமை, தெளிவு, செறிவு, பொருளாழம், சொற்சுருக்கம், தர்க்கமுறை, இலக்கணக் குறிப்பு முதலிய விசேஷங்கள் யாவும் கொண்டு சிறந்து விளங்குகிறது. தமது இப்பெருமுயற்சிக்கு ஆதாரமாக உரையாசிரியர் பழம் பெரு நூல்கள் பலவற்றை ஆராய்ந்து, திருவாசகப் பாக்களுக்கு மேற்கோள்களாக எடுத்துக் காட்டியிருக்கும் அரிய சாதனை பாராட்டுக்கு உரியது. உரையாசிரியரின் உரை வளத்துக்கு ஓர் உதாரணம் பார்ப்போம்:

> தினைத்தனை உள்ளதோர்
>     பூவினில் தேனுண்ணாதே
> நினைத்தொறும் காண்தொறும்
>     பேசுந்தொறும் எப்போதும்
> அனைத்தெலும்(பு) உள்நெக
>     ஆனந்தத் தேன்சொரியும்
> குனிப்புடை யானுக்கே
>     சென்றூதாய் கோத்தும்பீ

"இது, நீ தினையளவுள்ள இப்பூவினை ஊதுதலை விடுத்து எப்போதும் எவ்விடத்தும் ஆனந்தத் தேன்சொரியும் திருவடி மலரால் நடிப்போன் கண்ணே தூதாகச் சென்று ஊதுமாறு அதனை அவள் விடுத்தது.

(பொழிப்புரை) அரச வண்டே, இப்பூவிலே ஒரு தினை அளவாக உள்ள தேனை விரும்பி உண்டு உழலாது, தன்னை நினைக்குந்தோறும், நினைத்துப் பேசுந்தோறும், பேசி அதன்பாற் சென்று காணுந்தோறும், அங்ஙனம் நினைத்தலும் பேசுதலும் காணுதலும் அற்ற ஏனை எக்காலத்திலும், உடம்பின் கண்ணுள்ள எல்லா எலும்புகளும் இளக, இன்பத் தேனைச் சொரியும் (மலர்த் திருவடியால்) திருக்கூத்தயர் வோன்பால் (தூதாகச்) சென்று அவன் திருவடிமலரை ஊதுவாயாக."

இந்தப் பெரிய உரைநூலில் உரையாசிரியரின் இனிய, தெள்ளிய உரை விளக்கம் முழுவதும் இத்தகைய சிறந்த முறையில் அமைந்திருக்கிறது.

இம்மாபெரும் ஆராய்ச்சி உரை நூல் 1184 பக்கங்களுடன் நல்ல வெள்ளைத் தாளில் அச்சிடப்பட்டு, அழகும் அழுத்தமும் கொண்ட அமைப்புடன் சிறந்து விளங்குகிறது.

வெளியிட்டவர்: பத்மா பதிப்பகம், மாவிட்டபுரம், தெல்லிப் பழை, இலங்கை; விலை: ரூ. 15.



# என்று
# கடைக்கு மர்பி ரேடியோ

வந்ததோ அன்று முதல் ஆதரவாளர்கள் எண்ணிக்கை பெருகி கடையின் வியாபாரமும் பெருகியிருக்கிறது. இந்த ரேடியோ மூலம் ஜனங்களும் வெகுவாக சந்தோஷத்தை அனுபவிக்கிறார்கள்.



இது மர்பி மாடல் 194-டிஏ 194-ஏ.ஸி மெயின்களுக்கு. டியு 194-ஏ. ஸி அல்லது டி. ஸி மெயின்களுக்கு.

விலை ரூ. 490/-

# மர்பி ரேடியோ
# murphy radio

விநியோகஸ்தர்கள்:

அடிஸன் அன்டு கம்பெனி லிமிடெட் 158, மவுன்ட் ரோட், மதராஸ்-2.

மர்பி ரேடியோ ஆப் இந்தியா லிமிடெட், பம்பாய் 12.




## 11. சிறைவாசம்

பூபதி அந்தக் கானகத்தின் வழியே நடந்தான். அவனுக்குத் தன் நினைவே இருக்கவில்லை. சுமதியைப் பற்றிய நினைவிலேயே ஆழ்ந்தபடி வேகமாக நடந்து கொண்டேயிருந்தான்.

அந்தப் பெரியவர் சொன்னபடி மூன்று கல் தூரம் நடந்த பின்பு, விசாலமான ஒரு பெரிய சாலை வந்தது. அந்தச் சாலையின் இரண்டு பக்கங்களிலும் பெரிய பெரிய மாட மாளிகைகளும் கூட கோபுரங்களும் வானளாவ எழுந்து நின்றன.

பூபதி இது வரையில் இத்தனை பெரிய பட்டணத்தைப் பார்த்ததேயில்லை. எத்தனை பெரிய கடை வீதிகள்! அந்த வீதிகளில் தான் எத்தனை கடைகள்!

பூபதி அந்த வீதிகளை யெல்லாம் கடந்து ராஜ வீதியை அடைந்தான். அடேயப்பா! அரண்மனை என்றால் இத்தனை பெரிய கட்டடம் என்பது பூபதிக்கு இத்தனை நாட்களாகத் தெரியாது. உயரமான மதில் சுவர்கள் நீண்ட நெடுந் தூரம் வரையில் நீண்டிருந்தன. மதிற் சுவரை ஒட்டி ஆழமும் அகலமும் கொண்டு நீர் நிறைந்த அகழி சூழ்ந்து பார்ப்பவர்களைப் பயமுறுத்தியது.

மிகப் பெரிய கதவுகளுடன் வானளாவ எழுந்து நின்ற அரண்மனையின் பிரதான வாசலில் ஏராளமான ஆயுதந் தாங்கிய வீரர்கள் காவல் புரிந்தனர். பூபதிக்கு அவர்களைப் பார்ப்பதற்கே பயமாயிருந்தது. பூபதி அந்தப் பெரிய விசாலமான ராஜ வீதியோடு நடந்து அரண்மனையைச் சுற்றி வந்தான். கிழக்கு, மேற்கு, தெற்கு, வடக்கு முதலிய நான்கு திக்குகளிலும் அரண்மனைக்கு வாசல்கள் இருந்தன. அந்த வாசல் ஒவ்வொன்றிலும் ஆயுதந் தாங்கிய ராணுவ வீரர்கள் காவல் புரிந்தனர். பூபதிக்குக் களைப்பு மேலிட்டது. மேலே என்ன செய்வது என்று அவனுக்கு ஒன்றும் தோன்றவில்லை.

பூபதி இது வரையில் அரண்மனை, மதில் சுவர்கள், அகழி முதலிய எதையும் பார்த்ததில்லை. ஆகவே, சுமதியைப் பிரிந்த இந்த நிலையில் அவன் மனம் தாங்க முடியாத துக்கத்தில் தவித்துக் கொண்டிருந்தாலும், இந்த அதிசயமான அரண்மனையைப் பார்த்ததில் அவனுக்கு ஒரு புறம் ஆச்சரியமாகவும் இருந்தது. கூடவே அவனுக்கு ஒரு பயமும் தோன்றியது. "இந்தப் பெரிய அரண்மனையைச் சுற்றி இத்தனை கட்டுக் காவல் இருக்கிறதே. நாம் எப்படி உள்ளே நுழைய முடியும்? இந்த ஊரில் எங்கேயாவது ஓர் இடத்தில் தங்கியிருந்து கொண்டு அரண்மனையில் நுழையச் சந்தர்ப்பத்தை எதிர் பார்த்துக் கொண்டிருக்க வேண்டும்" என்று தீர்மானித்தான் பூபதி.

அரண்மனை எல்லைக்கு ஒரு கல் தூரத்தில் அழகான சின்ன வீடு ஒன்றிருந்தது. அந்த வீட்டைச் சுற்றி நறுமணம் கமழும் மலர்கள் நிறைந்த செடிகளும் கொடிகளுமாகத் தழைத்துப் பசுமை படர்ந்து பூத்துக் குலுங்கின. மல்லிகை, முல்லைக் கொடிகள் ஏராளமாயிருந்தன; ரோஜாச் செடிகள் கம்மென்று மணம் வீசி மகிழ்வித்தன; பவள மல்லிகை மரமும், மகிழ

மரமும் மலர்களைச் சொரிந்து அங்கு வீசும் தென்றலில் நறுமணத்தைக் கலந்தன.

பூபதிக்கு இந்த இடத்தைக் கண்டதும் மனத்தில் மட்டற்ற மகிழ்ச்சி பிறந்தது. இந்த வீட்டில் மட்டும் தங்கியிருக்க முடிந்தால் சுமதியை என்றாவது ஒரு நாள் நிச்சயம் காண முடியும் என்ற நம்பிக்கை அவன் மனத்தில் பிறந்தது.

பூபதி மெதுவாக அந்த வீட்டில் நுழைந்தான். வாசல் திண்ணையில் சுமார் ஐம்பது வயது மதிக்கத் தகுந்த கிழவியும் பத்து வயதுச் சிறுமி ஒருத்தியும் அமர்ந்து வண்ண மலர்களைத் தொடுத்து மாலையாகக் கட்டிக் கொண்டிருந்தனர்.

பூபதியைக் கண்டதும் அந்தக் கிழவி, "யார் அப்பா, நீ? இங்கே வந்து இந்தத் திண்ணையில் உட்காரு. ரொம்பக் களைத்துப் போயிருக்கிறாயே!" என்று அன்பு ததும்பப் பேசி அவனை அழைத்தாள்.

பூபதி போய்த் திண்ணையில் உட்கார்ந்து கொண்டான். நெடுந் தூரம் நடந்து வந்த களைப்பினாலும் கடும் வெய்யிலினாலும் பூபதியினால் சிறிது நேரம் ஒன்றும் பேச முடியவில்லை. மர நிழலும் குளிர்ந்த காற்றும் சில நிமிஷங்களில் அவன் களைப்பை ஆற்றின.

"பாட்டி, நான் ஓர் அநாதை. என் பெயர் பூபதி. நெடுந் தூரம் நடந்து வந்த களைப்பினால் பேச முடியவில்லை."

"பூபதி, கவலைப்படாதே. கடவுள் ஒருவர் இருக்கும்போது யாருமே அநாதையில்லை. இப்பொழுது நீ ஒன்றும் பேச வேண்டாம். நல்ல மோர் கொண்டு வந்து தரச் சொல்லுகிறேன். சாப்பிடு. பிறகு தோட்டத்தில் நல்ல கிணறு இருக்கிறது. அதில் நன்றாய் ஸ்நானம் செய்தாயானால் களைப்புத் தீர்ந்து விடும். அப்புறம் சாப்பிட்டு விட்டு நீ உன் கதையைச் சொல்லலாம். இதை உன் வீடு என்று நினைத்துக் கொள்!" என்று கூறிக் கிழவி சிறுமியை நோக்கி, "கமலம், உள்ளே போய் ஒரு குவளையில் மோர் கொண்டு வந்து கொடு" என்றாள். கமலம் 'கிடுகிடு' வென்று உள்ளே போய் மோர் கொண்டு வந்து பூபதியிடம் கொடுத்தாள். பூபதி ஆவலோடு அதை வாங்கிச் சாப்பிட்டான்.

"பாட்டி, சுகந்த மணம் வீசும் குளிர்ந்த காற்றும், உங்களுடைய இனிய பேச்சும் என் களைப்பை அப்பொழுதே போக்கி விட்டன. தங்கள் அன்பு நிறைந்த இந்த மோர் எனக்குப் புத்துயிர் அளித்து விட்டது. எங்கள் ஊரில் நான் மாடு மேய்த்துக் கொண்டிருந்தபோது சில முரடர்கள் என்னைக் கட்டிப் பிடித்துக் கொண்டு போய்க் கப்பலில் ஏற்றினார்கள். கப்பலில் ஒரு ராஜகுமாரியைக் கண்டேன். அவளும் என்னைப் போலவே அவர்களிடம் அகப்பட்டுக் கொண்டிருந்தாள். வெகு சிரமப்பட்டு அந்த முரட்டு மனிதர்களின் சதித் திட்டங்களை அறிந்து கொண்டு முந்தா நாள் இரவு அவளுடன் ஒரு சிறு படகில் ஏறிக் கப்பலிலிருந்து தப்பி வந்து அதிகாலையில் இந்தத் தேசத்தின் வடமேற்குக் காட்டுப் பிரதேசக் கடற்கரையில் ஒதுங்கினோம். நான் உணவு கொண்டு வருவதற்காக அவளை அங்கேயே விட்டு விட்டுப் புறப்பட்டேன். திரும்பி வந்து பார்த்தால் அவளைக் காணோம். அவள் இப்பொழுது அரண்மனைக்கு வந்துவிட்டதாக ஒரு பெரியவர் சொல்லக் கேட்டேன்... அவளை எப்படியாவது......"

"தம்பி, அரண்மனை சம்பந்தப்பட்ட விஷயம் என்றால் நீ சர்வ ஜாக்கிரதையாக இருக்க வேண்டும். நான் தினம் அரண்மனையில் ராஜ குடும்பத்துக்குப் பூமாலை கட்டிக் கொடுக்கிறேன். நான் இப்பொழுது போவேன். மெதுவாக இது பற்றி விசாரிக்கிறேன். பிறகு அவளை நேரில் சந்திக்க வழி தேடுவோம்! நீ ஸ்நானம் செய்து விட்டுச் சாப்பிடு. அப்புறம் பார்த்துக் கொள்ளலாம்!"

"பாட்டி, என்னையும் உங்களோடு அரண்மனைக்கு அழைத்துப் போங்கள். அங்கு ராஜகுமாரி சுமதியைப் பார்க்க முடிந்தால்......"

"பூபதி, உன்னை அழைத்துப் போகிறேன். அங்கு நீ சர்வ ஜாக்கிரதையாக நடந்து கொள்ள வேண்டும். ராஜகுமாரியை முன்பே தெரிந்ததாக நீ காட்டிக் கொள்ளக் கூடாது. மறைவில், தூரத்தில் இருந்தபடி பார்த்துவிட்டுத் திரும்பிவிட வேண்டும்!" என்று எச்சரித்தாள்.

"சரி, பாட்டி!" என்றான் பூபதி.

கிழவியும் பூபதியும் அரண்மனைக்குச் சென்றனர். கிழவி ஊரைச் சுற்றிக் கொண்டு அங்கே போகவில்லை. ஒரு கொடி வழியில் நுழைந்து சிறிது நேரத்தில் அரண்மனை நந்தவனத்துக்கு வந்து விட்டாள். பூபதியும் அவளைப் பின் தொடர்ந்தான்.

நந்தவனத்துக்குள் புகுந்ததும் கிழவி அவனை ஒரு ஓரமாக இருக்கச் சொல்லி விட்டு, மகாராணி அமரும் சலவைக் கல் மேடையை நெருங்கினாள். அப்பொழுது மகாராணி அங்கு அமர்ந்திருந்தாள். பூபதி நன்றாய்க் கவனித்துப் பார்த்தான். இந்தச் சமயம் சர்வாபரணங்களும் அணிந்து சுமதி அங்கே தோன்றினாள். பூபதி முதலில் அவளைக் கண்டு திகைத்தான். ஆனால் மறு கணம் "சுமதி!" என்று தன்னை மறந்து அழைத்து விட்டான். உடனே அரண்மனைக் காவலர்கள் ஓடி வந்து அவனைப் பிடித்துச் சிறைச் சாலைக்கு அழைத்துச் சென்றனர். (தொடரும்)

Edited, Printed and Published by R. Krishnamurthy at the "Kalki" Press,
No. 20, Dr. Guruswamy Mudaliar Road, Kilpauk, Madras 10.

# நாளுக்கு நாள் அதிக தெளிவான,
# எழிலோங்கும் சருமம்

கேடில் கலந்த ரெக்ஸோனு இந்த அற்புத வேலையைச் செய்யட்டும்.

ரெக்ஸோனுவின் கேடில் கலந்த நுரையை உங்கள் சருமத்தில் மெதுவாகத் தேய்த்து, பிறகு கழுவுங்கள். உங்கள் சருமம் நாளுக்கு நாள் அதிக மழமழப்பும், தெளிவும் பெறுவதைக் காண்பீர்கள். அதனுல் புதுப் பொலிவுடன் விளங்குவீர்கள்.

## ரெக்ஸோனு

கேடில்* கலந்த சோப் இதுஒன்றே




* சருமத்திற்கு ஊட்டமளித்து மிருதுவாக்கும் எண்ணெய்களின் பிரத்தியேகக் கலவையின் ரெஜிஸ்டர் செய்யப்பட்ட பெயர்.

R.P. 117-50 TM

ரெக்ஸோனு ப்ரொப்ரைடடரி லிமிடெடுக்காக இந்தியாவில் தயாரித்தது.

**Regd. No. M. 4392**

*Registered as a newspaper in Ceylon*